


# அம்புலிமாமா

மாதாமாதம் கதைகள் வாயிலாக இந்திய நாட்டின் கடந்த கால, தற்கால மேன்மையை விவரிக்கிறது.

வண்ணப்படங்கள் அறுபத்து நான்கு பக்கங்களிலும் மிளிர, புராணங்கள், பழங்கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், பெரியோர்களின் வாழ்க்கை ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதக் கதைகளையும் மேலும் சீரிய கற்பனைக் கதைகளையும் இன்றைய நிலைக்கு ஏற்ப அளிக்கிறது.

11 மொழிகளிலும் சமஸ்கிருதத்திலும் கூட வெளிவருகிறது.

சந்தா விவரங்களை அறிய முகவரி:

டால்டன் ஏஜன்சீஸ், 188 என். எஸ். கே. சாலை, சென்னை-600 026

# மங்கை
## இம் மாதம் படித்தீர்களா?




ஒவ்வொரு வரியும்
பெண்ணுலகுக்குப் பெருமையும்
உயர்வையும் தரும்
இணையற்ற இதழ்
**மங்கை**

இல்லற வாழ்வை
இனிமையாக்கும்
மகளிர் மாத இதழ்-
ஒவ்வொரு இல்லத்தரசியும்
தவறாமல் படித்து வரும் மாத இதழ்
**மங்கை**

ஒவ்வொரு வரியும் பெண்களுக்கு
வாழ வழி காட்டுகிறது;
ஒவ்வொரு பகுதியும்
இனிய இல்லறத்துக்கு உதவுகிறது
**மங்கை**

இதோ உங்கள் மகனுக்கு ஓர் அற்புத பரிசு –
உலகிலேயே சிறந்த துப்பாக்கியின்
அசல் அச்சு



இதோ வந்து விட்டது உலகத்தின் மிகச்சிறந்த துப்பாக்கியின் உற்சாக அனுபவம்.

ட்ரூ-கன்- U.Z.I. இஸ்ரேல் நாட்டின் புகழ்பெற்ற அதிரடிப் படையான மோஸாட் உபயோகிக்கும் துப்பாக்கியின் உண்மையான மாடல்.

தொட்டுப் பாருங்கள். வடிவம், அளவு, வேலைப்பாடு — இவற்றை கவனியுங்கள். சத்தத்தைக் கேளுங்கள். உண்மையிலேயே இது நிஜத்துப்பாக்கி தான் — விசையை அழுத்தும் வரை!

- தண்ணீரை 'சர்' என்று பீச்சியடிக்கிறது.
- 'டுமீல் டுமீல்' என்று இடைவிடாமல் சுடுகிறது.
- உடையாத உயர்ரக ப்ளாஸ்டிக்கினால் ஆனது.




- கூரான முனைகளோ, உலோக பாகங்களோ இல்லாதது.
- கறுப்பு, ஆலிவ் பச்சை, பளபளக்கும் வெள்ளி நிறங்களில் கிடைக்கிறது.

புதிய

# Tru-Gun

U.Z.I. சப்மெஷின் கன்

பார்த்தால் துப்பாக்கி, வெடித்தால் வேடிக்கை



விசேஷ அறிமுக சலுகை

உங்கள் வீட்டிலும் 'டுமீல்' சத்தம் கேட்க வேண்டுமா? இந்த கூப்பனை மறக்காமல் எடுத்துக் கொண்டு விளையாட்டுப் பொருள் அங்காடிக்கு வாருங்கள். ட்ரூ-கன் விலையில் 5% தள்ளுபடி பெறுங்கள்.

பெயர்: ................................................

வயது: .................... வகுப்பு: ....................

முகவரி: ................................................

................................................

HansaVision CTT 10871 TM

# பொம்மை

திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

மாதம் ஒருமுறை மலரும்
சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## இயற்கை விதி

இயற்கையுடன் ஒன்றிப் போக வேண்டும் என்பதே நம் மூதறிஞர்கள் நமக்குக் கூறும் அறிவுரை. இதன் பொருள் என்ன?

ஆகாயம் ஏன் நீல நிறம்? சூரியன் ஏன் வெப்பமாக உள்ளது? சூரியனின் கதிர்களிலிருந்து சக்தி பெற்று ஒளி வீசும் சந்திரனின் கிரணங்கள் ஏன் குளிர்ச்சியாக உள்ளன? நட்சத்திரங்கள் ஏன் எப்போதும் பிரகாசிக்கின்றன? மலர்களின் நிறங்களை யார் நிர்ணயித்தார்கள்? புல் ஏன் எங்கும் பச்சை நிறத்தில் உள்ளது? மயிலுக்கு நடனமாட யார் கற்றுக் கொடுத்தார்கள்? சிலந்திக்கு வலை பின்ன யார் சொல்லிக் கொடுத்தார்கள்? இப்படிப்பட்ட பல கேள்விகள் பலர் மனத்தில் எழலாம்.

சிலர் இவற்றைக் கடவுள் அளித்தவர் என்கிறார்கள். விஞ்ஞான அறிவுடைய சிலர் இவற்றை இயற்கையின் இயல்பு என்கிறார்கள். இன்னும் சிலர் இவற்றிற்கான காரணங்களை ஆராய்ந்து கொண்டே இருக்கிறார்கள்.

இயற்கையின் படைப்புகளில் சிறந்தது மனிதனே. அவனது ஒவ்வொரு அவயமும் சரியான விதத்தில் சரியான இடத்தில் செயல்பட அமைந்துள்ளது. அவன் இயற்கைக்கு மாறாக நடக்கும்போது இவை தாறுமாறாகின்றன. இதன் காரணமாக அவன் பல நோய்களையும் இன்னல்களையும் அடைகிறான்.

இயற்கை எல்லா ஜீவராசிகளுக்கும் அமைதியை அளித்துள்ளது. மனிதன் மிருகம் பறவை எல்லாமே இயற்கை என்னும் அரசாங்கத்திற்கு உட்பட்டவை. இந்த இயற்கை அரசாங்கம் சட்டங்களை வகுத்து நடக்கிறது.

இந்த இயற்கையின் விதியை நாம் மீறக்கூடாது.


மதிமுகம்: 92 பிப்ரவரி 1993 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00






# ஒற்றுமைக் கொடியை ஓங்கி உயர்த்துவோம்

உங்களது மாத இதழ் "அம்புலிமாமா" 45 ஆண்டுகளுக்கு முன் ஆரம்பிக்கப் பட்டது. அது வரலாற்று முக்கியத்துவம் பெற்ற காலம். ஒருபுறம் அந்நிய ஆட்சியை எதிர்த்து நாடு விடுதலை பெற்றது. ஆனால் நம்நாடு இந்தியா, பாகிஸ்தான் இருநாடுகளாகப் பிரிக்கப்படுவதை ஏற்க வேண்டியும் ஆயிற்று.

அப்போது நாம் ஒளிமயமான எதிர்காலத்தை எதிர்பார்த்தோம். அன்னிய ஆட்சியும் மதவெறியும் ஒழிந்தது என நம்பினோம். நம்முன் அமைதியும், ஒற்று மையும் முன்னேற்றத்திற்குமான வழி வந்து விட்டதாக எண்ணினோம்.

அந்தோ! இவை எல்லாம் பகற்கனவுதானா? தியாகிகளின் தியாகமும் பட்ட கஷ்டங்களும் வீணானவைதானா?

சில விரும்பத் தகாத சம்பவங்கள் நிகழ்ந்தும் அவை அப்படி ஆகாது. மத வெறியும் அரசியலும் மக்களைப் பிரித்து வைக்க சுவர்கள் எழுப்ப முற்படுகின் றன. எல்லா மதங்களுக்கும் மேலாக நம் கடவுளின் குழந்தைகள் என்பது உண்மை. என்னதான் அரசியல் என்றாலும் நாம் இந்தியர்கள் என்பது உண்மை. இதை நாம் உணர வேண்டும். இல்லாவிட்டால் நம் வருங்கால சந்ததியினரை அழிக்க நாமே வழிபோடுவது போலாகிவிடும்.

இந்துமத நூல்கள் எல்லாம் கடவுள் எல்லா உயிரினங்களிலும் உள்ளார் என்றே கூறுகின்றன. இஸ்லாம் மதத்திலும் நபிகள் நாயகம் ஆண்டவனுக்கு மிகவும் பிரியமானது எல்லோரிடமும் அன்பு செலுத்துவதே என்கிறார். ஏசுநாதரும் "நீ உன்னை நேசிப்பது போலவே உன் அண்டை அயலார்களையும் நேசி" என்கிறார். நாம் ஒருவரையொருவர் எதிர்க்க எந்த மதம் போதிக்கிறது? எதுவும் இல்லையே. இத்தகைய வெறுப்பால் நம் அறியாமையைத்தான் நாம் வளர்த்துக் கொள்கிறோம்.

உங்களது இந்த மாதஇதழ் இந்தியாவின் வேற்றுமைகளில் ஒற்றுமையைக் காண்கிறது. இது இந்தியாவின் பன்மொழி பேசும் குழந்தைகளுக்கு அறிவு விருந்தை அளிக்கிறது. மத, இனக் கலவரங்கள் ஏற்படுவதால் ஒற்றுமைக் கொடி தாழ்ந்து போகிறதே என இது கவலைப்படுகிறது. இது இந்திய வரலாற் றில் தற்காலிக வந்து போன நிகழ்ச்சியாகவே இருக்கட்டும். அம்புலிமாமாவின் வாசகர்களாகிய நீங்கள் இந்தக் குழப்பமான நிலையிலிருந்து தெளிவான புதிய யுகத்தில் அடியெடுத்து வைக்கச் செல்லுமாறு செய்ய வேண்டும்.

ஜெய்ஹிந்த்!

பி. விஸ்வநாத ரெட்டி
சந்தமாமா பப்ளிகேஷன்ஸ்

# சீனாவில் மாறுதல்கள்

சோவியத் யூனியன் 1991-ல் குலைந்து பல நாடுகளாகப் பிரிந்ததும், கம்யூனிஸ ஆட்சி வீழ்ந்ததும் சீனா போன்ற கம்யூனிச நாடுகளையும் சில மாறுதல்களைச் செய்யும்படி ஆக்கிவிட்டது.



சென்ற ஆகஸ்ட் மாதத்தில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் 14வது தேசிய காங்கிரஸ் கூட்டங்கள் நடைபெற்றன. அப்போது சோஷலிசப் பொருளாதாரக் கொள்கை, ஆட்சி முறையில் பல திருத்தங்கள் கொண்டு வந்து சட்டங்களை இயற்றினார்கள். அதுவரை சீனா மற்ற நாடுகளுடன் பொருளாதார விஞ்ஞான விஷயங்களில் தொடர்பு கொள்ளாமல் அவை பற்றிய அறிவைத் தம் நாட்டில் பரவ விடாமல் தடுத்தும் வந்தது. ஆனால் தற்போதைய மாறுதல்களால் பிற நாடுகளுடன் பொருளாதாரம், புள்ளி விவரம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் தொடர்புகொள்ள முடிவு செய்துள்ளது. உலகின் மற்ற நாடுகளுக்கு சீனா தன் வாசல் கதவைத் திறந்து நுழைய அனுமதித்துள்ளது எனலாம்.

தூசி படிந்த பழம் முறைகளைத் தூய்தாக்கி நாட்டின் பொருளாதார நிலையை வலுப்படுத்த வேண்டும் என அக்கூட்டம் அபிப்பிராயப்பட்டு உள்ளது. கட்சியின் செயலாளர் சமர்ப்பித்த 2600 வார்த்தைகள் கொண்ட அறிக்கையில் பொதுச் சந்தை சக்திகளுக்கு ஊக்கமளித்து சுதந்திரமாகச் செயல்பட விட்டாலே நாட்டின் பொருளாதார நிலை சீரடையும் என்க் குறிப்பிட்டார். இம்மாதிரித் திருத்தங்கள் கூடப் புரட்சியின் ஒரு பகுதி என்றும் உற்பத்தியை இவை அதிகரிக்கும் எனவும் அந்த அறிக்கை கூறுகிறது.

இந்தத் திருத்தங்களை ஏற்று இது சீனாவின் இரண்டாவது புரட்சி என மகிழ்ந்தனர். 1949ல் மாவோ சே துங் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சி அதிகாரத்திற்கு வந்தது. மாவோவின் வலது கை போல விளங்கியவர் தெங்க்சியோ விங் 1979-ல் மாவோவின் மரணத்திற்குப் பின் சீனாவை நவீனப்படுத்த முற்பட்டார். 1987-ல் நடந்த 13வது காங்கிரசின் தலைமை வகித்தபின் போலீட் பீரோ அவரைத் தள்ளி வைத்தது. அவருக்கு இப்போது 88 வயது. அமைதியான முறையில் புரட்சி நடத்த அவர் முயன்று வருகிறார். ஓராண்டு காலமாக துணிவுடன் சுதந்திரப் பொதுச்

சந்தைக் கொள்கையைப் பிரசாரம் செய்து வருகிறார். அதற்கு தெங்க் கொள்கை என்ற பெயரும் ஏற்பட்டு விட்டது.

இக்கொள்கையால் சீனாவின் வரலாற்றில் புதிய திருப்பம் ஏற்பட்டு நாட்டின் பொருளாதாரம் உயரும் எனக் கருதுகிறார்கள். இன்றைய சீனாவின் 'தேசியத் தலைவர்' 14-வது தேசிய காங்கிரசில் கலந்து கொள்ளவில்லை தான். ஆனால் அக்கூட்டத்தின் கடைசி நாளன்று வந்து சற்று நேரம் இருந்து விட்டுச் சென்றார். போலிட் பீரோ உறுப்பினர்களில் பெரும் பாலானோர் ஐம்பது வயதிற்கு மேற்பட்டவர்களே. தன் கொள்கைகளை இந்த இளம் தலைமுறையினர்தான் வெற்றிகரமாக்குவார்கள் என தெங்க் நம்புகிறார்.




சீனாவை கி. மு. 18-12 நூற்றாண்டுகளில் ஷாங்க் வம்சத்தினர் ஆண்டனர். கி. மு. 3 வது நூற்றாண்டில் அது ஒரு மாபெரும் சாம்ராஜ்யமாகியது. அப்போதுதான் ஹூன் வம்சத்தவர் 11,450 மைல் நீளமும் 25 அடி உயரமுமான 'சீன மதில்' சுவரைக் கட்டினார்கள். கி. பி. 3வது நூற்றாண்டில் க்வின் வம்சத்தவர் ஆட்சிக்கு வந்தனர். அதற்குப் பின் டாங்க் வம்சத்தவர் கி. பி. 7வது முதல் 10வது நூற்றாண்டு வரை ஆண்டனர்., 10 - 13 நூற்றாண்டுகளில் சாங் வம்சத்தவர். க்விஸ் வம்சத்தவர் அதன் பிறகு வந்து 1912 வரை ஆண்டனர். 1912-ல் சன்யாட்சென் ஜனநாயக ஆட்சியை நிறுவினார். அவருக்குப் பின் ஜெனரல் சியாங்கேஷேக் அதிகாரத்தில் இருந்தார். இரண்டாவது உலகப் போரில் (1939-45) சீனாவின் சில பகுதிகளை ஜப்பான் ஆக்கிரமித்தது. ஜப்பான் தோற்றபின் சீனா முழுவதிலும் கம்யூனிஸ்ட் ஆட்சி நிலவியது. 1949 அக்டோபர் 1-ல் "சீன மக்கள் குடியரசு' என்ற பெயரைச் சீனா பெற்றது.



# நியாயமாய் நட!

கந்தப்பன் புலியூருக்கு வந்து வட்டிக் கடையை ஆரம்பித்தான். அதற்கு முன் மனலூரில் வட்டிக் கடை நடத்தி அநியாய வட்டி வாங்கியதால் அவ்வூர் இளைஞர்கள் சிலர் சேர்ந்து அவனை விரட்டி விட்டார்கள். அதனால்தான் புலியூருக்கு வந்து கடை வைத்து அவன் வட்டிக்குப் பணம் கொடுக்கலானான். முன்போல அநியாய வட்டி தான் வாங்கி வந்தான்.

ஆனால் அந்த ஊரில் அவன் கொடுத்த கடன் தொகை வசூலாகவில்லை. அதனால் அவன் மிகவும் கவலைப்படலானான். அதை கண்ட சிலர் "உன் கடனை நீ வசூலிக்க வேண்டுமானால் காட்டூர் கட்டைய்யனிடம் உதவி கேள்" என்று கூறினார்கள்.

கந்தப்பன் உடனேயே காட்டூருக்குப் போய் கட்டைய்யனைக் கண்டான். கட்டைய்யன் காட்டூரில் ஒரு மாந்தோப்பில் வசித்து வரும் இளைஞன். கந்தப்பன் தன் பிரச்னையை அவனிடம் கூறவே அவனும் தான் ஒரு வாரத்தில் புலியூருக்கு வந்து அவ்விஷயத்தைக் கவனிப்பதாகக் கூறினான்.

ஒருவாரம் கழிந்ததும் கட்டைய்யன் புலியூருக்கு வரவே கந்தப்பன் தன் கடன்காரரர்களின் பெயர்களைக் கூறினான். கட்டைய்யனும் அவர்களிடமிருந்து ஒரு வாரத்திற்குள் பணம் வசூலித்துக் கொடுப்பதாக உறுதி கூறினான்.

கந்தப்பனிடம் கடன் வாங்கியவர்களில் சுந்தரம் ஒருவன். கட்டைய்யன் கந்தப்பனை அவன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். போகும் போது கந்தப்பன் அங்கு என்ன செய்ய வேண்டும் என்பதனைச் சொன்னான். அவன் கந்தப்பனை

–சிவனார் செல்வன்–



சுந்தரத்தின் வீட்டில் விட்டு விட்டு எங்கோ சென்றான்.

கந்தப்பன் சுந்தரத்தைக் கூப்பிடவே அவனும் வீட்டிலிருந்து வெளியே வந்தான். அவனிடம் கந்தப்பன் பணம் கொடுக்கும்படிக் கேட்கவே அவனும் "கொடுத்து விடுகிறேன். பணம் இப்போது கையில் இல்லையே" என்றான். ஆனால் கந்தப்பனோ "இன்று பணம் வாங்காமல் இங்கிருந்து நகரப் போவதில்லை" என்று கூறி அங்கேயே உட்கார்ந்து விட்டான். இதை வேடிக்கை பார்க்கப் பலர் கூடி விட்டார்கள்.

இதைக் கண்ட சுந்தரம் கந்தப்பனை வீட்டினுள் அழைத்துப் போய் "இதோ பார்! எனக்கும் ஓரிடத்திலிருந்து பணம் வர வேண்டி இருக்கிறது. இப்போது அது கிடைத்தால்கூட நான் உன் கடனைத் தீர்த்து விடுவேன்" என்றான். கந்தப்பனும் "சரி. என் பாக்கியை விரைவில் தீர்ப்பதாக இங்கே கூடியுள்ள ஊரார் முன் கூறி விடு" எனவே சுந்தரமும் அதற்கு இணங்கி கந்தப்பனோடு வீட்டிற்கு வெளியே வந்தான்.

அவன் ஊராரிடம் கந்தப்பனின் பாக்கியை விரைவில் தீர்த்து விடுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒருவன் வந்து சுந்தரத்திடம் "ஐயா! நீங்கள் கொடுத்த கடனைத் தீர்க்க வந்திருக்கிறேன். கந்தப்பனுக்கும் நீங்கள் பணத்தை இன்றே கொடுக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பியதால் உடனே பணத்தோடு வந்து விட்டேன். கந்தப்பனுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டுமோ அதைக் கொடுத்துவிட்டு மீதத்தை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிப் பணத்தையும் கொடுத்தான்.

சுந்தரம் திருதிருவென விழித்தான். அந்த ஆளைக் கண்டு பிடித்து அனுப்பியது கட்டைய்யன் தான். ஊரார் முன் சொன்னபடி அப்போதே கந்தப்பனின் கடனை அவன் தீர்க்க வேண்டியதாயிற்று.

கந்தப்பனின் மற்றொரு கடன் காரன் ராமசாமி. கட்டைய்யன் அவனது நடவடிக்கைகளை எல்லாம் கூர்ந்து கவனித்தான். அவன் அடிக்கடி ஊருக்கு வெளியே உள்ள மிராசுதாரர் முத்துசாமியின் மாளிகைக்குப் போய் வருவதை அவன் தெரிந்து கொண்டான்.

முத்துசாமி அவ்வூர் பிரமுகன். நல்ல செல்வாக்கு உடையவன். அதனால் ராமசாமி அவனிடம் போய் தன் மகனுக்கு அரசாங்க வேலை கிடைக்கச் சிபாரிசு செய்யுமாறு வேண்டலானான். முத்துசாமியின் சிபார்சின் பேரில் அநேகமாக ராமசாமியின் மகனுக்கு அரசாங்க வேலை கிடைப்பதும் உறுதியாகிவிட்டது. இதை எப்படியோ கட்டைய்யன் தெரிந்து கொண்டு விட்டான்.

அவன் கந்தப்பனை முத்துசாமியின் வீட்டிற்குப் போகச் சொல்லி அங்கு என்ன செய்ய வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினான் கந்தப்பனும் முத்துசாமியைக் கண்டு "ராமசாமி என்னிடம் வாங்கின கடனைத் தீர்க்காமலே தட்டிக் கழித்து வருகிறான். நீங்கள் சொல்லி எனக்கு என் பணம் கிடைக்கச் செய்யுங்கள்" என்று வேண்டினான்.

முத்தசாமி உடனே ராமசாமியை அழைத்துவரச் சொன்னான். ராமசாமி வந்ததும் அவன் "வாங்கின



கடனை நீ திருப்பிக் கொடுக்காமல் இருக்கிறாயாமே. உன்னை இனி எப்படி நம்புவது?" என்றான். ராமசாமி பதறிப் போய் அப்போதே கந்தப்பனின் கடனைத் தீர்த்து விடுவதாகக் கூறித் தன் வீட்டிற்குப்போய் பணம் எடுத்து வந்து கந்தப்பனின் கடனை முழுவதுமாகக் கொடுத்துக் கணக்குத் தீர்த்தான்.

கந்தப்பனும் "சரி. நீ என் கடன்களை வசூலித்துக் கொடுத்ததற்கு நன்றி. இன்னும் ஒருவனிடமிருந்து கடன் பாக்கி வரவேண்டி இருக்கிறது. அதையும் கிடைக்கும்படிச் செய்" என்றான்.

கட்டைய்யனும் "யாருடையது?

ஓ! அந்த முருகப்பன் கடனா? பாவம். அவனை விட்டு விடு. அவனை அவன் தம்பி ஏமாற்றி எல்லா சொத்தையும் பிடுங்கிக் கொள்ளப் பார்க்கிறான். விவகாரம் கோர்ட்டுக்குப் போய்விட்டது. அவன் திக்குமுக்காடிக் கொண்டிருக்கிறான்'' என்றான்.

கந்தப்பனும் ''அப்படியானால் அவனிடமிருந்து என் பணம் திரும்பக் கிடைக்காது என்கிறாயா?'' என்று கேட்டான். கட்டைய்யனும் கொஞ்சம் யோசித்துவிட்டு ''கந்தப்பா! நான் உன் கடன்களெல்லாம் திரும்பக் கிடைக்கச் செய்ததற்கு எனக்கு ஏதாவது பணம் கொடுக்கத்தானே போகிறாய். அந்தத் தொகை எனக்கு வேண்டாம். அதை முருகப்பனின் பேரில் வரவு வைத்து அவன் கணக்கைச் சரி செய்து விடு'' என்றான்.

இதைக் கேட்டதும் கந்தப்பனின் மனதில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. கட்டைய்யன் மனது இப்படிப்பட்டதா? அவன் உடனே ''கட்டைய்யா! நீ அறிவிலும் மட்டுமல்லாது தாராள மனப்பான்மையிலும் உயர்ந்தவன். நீ கூறியபடியே உனக்கு நான் கொடுக்க நினைக்கும் பணத்தை முருகப்பனின் கடனைத் தீர்க்க வரவு வைக்கிறேன். ஆனால் உனக்கு மேலும் ஒன்றைக் கொடுக்க விரும்புகிறேன். நல்ல இல்வாழ்க்கைதான் அது. என் மகளை உனக்குக் கல்யாணம் செய்து வைக்க விரும்புகிறேன். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

கட்டைய்யனும் ''உன் மகளை நான் ஏற்கனவே பார்த்திருக்கிறேன். அவளுக்கு சம்மதம் என்றால் எனக்கு ஆட்சேபணை இல்லை'' என்றான். அதுகேட்டு கந்தப்பன் மகிழ்ந்து கல்யாணத்தைப் பற்றிப் பேச உள்ளே சென்றான்.





# புலியப்ப துரை

புலியப்பதுரை ஒரு சிறிய நாட்டின் மன்னன். அவன் மிகவும் கொடியவன். அவனை மகாப்பிரபு என்றும் துரை என்றும் அவனுக்குப் பயந்தே எல்லோரும் புகழ்ந்தனர். இதனால் அவனுக்கு கர்வம் தலைக்கேறி விட்டது.

இப்படி இருக்கையில் இமய மலையில் தவம் செய்து கொண்டிருந்த ஒரு யோகி புலியப்பதுரையின் ஊருக்கு வந்தார். மக்கள் அவரை தரிசித்து பக்திசிரத்தையுடன் வணங்கி வரலானார்கள். அவரும் அவர்களுக்கு அறிவுரைகள் கூறிவரலானார். இது புலியப்ப துரையின் காதிற்கு எட்டியது.

யோகி கடவுளைப் பற்றி தான் கொண்டுள்ள கருத்திற்கு நேர் எதிராகக் கூறிவருகிறார் என புலியப்ப துரை ஒற்றர்கள் வாயிலாக அறிந்து கொண்டான். அவன் கடுங்கோபம் கொண்டு அந்தயோகியைத் தன் முன் இழுத்து வந்து நிறுத்தும்படித் தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான். வீரர்களும் உடனேபோய் அந்த யோகியை இழுத்து வந்து புலியப்பதுரை முன் நிறுத்தினார்கள்.

அவரைக் கண்டதுமே புலியப்ப துரை தன் கண்களை உருட்டி 'நான் யார் தெரியுமா? இந்நாட்டு மன்னன் இவ்வுலகின் சக்கரவர்த்தி. இந்நாட்டில் உள்ளவர்கள் எல்லாம் என்னைத் தான் கடவுளாக மதிக்கிறார்கள். அப்படி இருக்கப் பரதேசிப்பயலான நீ வேறு கடவுள் யாரோ இருப்பதாக எல்லோரிடமும் கூறி வருகிறாயாமே. இது மன்னிக்க முடியாத குற்றம். இதற்கு ஏற்ற தண்டனை என்ன தெரியுமா? மரண

—கா. குருமூர்த்தி—

தண்டனைதான்' என்றான்.

அதைக் கேட்டு யோகி புன்னகை புரிந்தவாறே "அரசே! உங்களிடம் அறிவும் ஆற்றலும் படைத்த இரு அமைச்சர்கள் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவர்களிடம் ஒரு கேள்வியைக் கேட்கிறேன். அவர்களது பதிலைக் கேட்ட பிறகு நீங்கள் உங்கள் தண்டனையை அளிக்கலாம்" என்றார்.

புலியப்பதுரையும் "இதோ இருக்கிறார்கள் என் இரு அமைச்சர்களும். உன் கேள்வியைக் கேள்" என்றான். யோகியும் மூன்று ஓலைகளில் "மண் என்றால் என்ன?" என்று எழுதி அந்த இரு அமைச்சர்களிடமும் மற்றொரு மந்திரியிடமும் கொடுத்தார்.

ஒரு அமைச்சர் "இந்த உலகம் மண்ணால் ஆனது" என்பதில் கூறினார். இரண்டாவது அமைச்சர் "மண் நீரிலிருந்து வேறுபட்டது" என்று கூறினார். மூன்றாவது மந்திரியோ "எல்லா ஜீவராசிகளும் இறந்தபின் மண்ணோடு மண்ணாகிறார்கள்" என்றார்.

அப்போது யோகி "அரசே! மூன்று மந்திரிகளும் சர்வ சாதாரணமான மண்ணை பற்றி இப்படி மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்தார்கள். இந்நிலையில் கடவுளைப் பற்றிய சூட்சும விஷயத்தில் கருத்து ஒற்றுமை என்பது சாத்தியமா?" என்று கேட்டார்.

புலியப்பதுரை சற்று யோசித்துவிட்டு சிம்மாசனத்திலிருந்து இறங்கி வந்து யோகியை வணங்கி "மகாத்மாவே! உங்கள் கேள்வி என் கண்களைத் திறந்து விட்டது. என் அகம்பாவம் அழிந்தது. என்னைத் தங்களது சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறி அடக்கத்துடன் நின்றான்.

யோகியும் அவனை ஆசீர்வதித்து அறிவுரைகள் கூறிச் சென்றார். அப்போது முதல் புலியப்பதுரையின் கொடுங்கோலாட்சி நல்லாட்சியாக மாறிவிட்டது.





# மாய மாளிகை

## 10

*[வித்தியாவதி காணாமல் போன நாள் முதல் தன் நண்பன் ஜகன்நாதனும் காணவில்லை என்றதால் சந்தேகப்பட்டு வாசஸ்பதி அதை மன்னனிடம் தெரிவித்தார். இளவரசியைத் தேடிச் சென்ற மகேந்திரன் ஒரு மாயமாளிகையை அடைந்து அங்கு ஒரு காவலாளியாக வேலைக்குச் சேர்ந்து உன்னிப்பாக கவனிக்கலானான். அச்சமயம்—]*

மறுநாள் மாலை மகேந்திரன் மிகவும் முன்னதாகவே காவல் காக்கச் சென்றான். அங்கே வாசலில் நின்று யாராவது மாளிகையிலிருந்து வெளியே வருகிறார்களா என அடிக்கடி பார்க்கலானான். சற்று நேரமானதும் மூன்று இளம் பெண்கள் மாளிகையிலிருந்து வெளியே வந்தார்கள். அவர்களோடு கிழவி வரவில்லை.

அந்த மூவரும் ஒரேவித ஆடைகளை அணிந்திருந்தார்கள். எனவே தான் முன்தினம் பார்த்த பெண் யாரென மகேந்திரனால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. கொஞ்ச நேரத்திற்குப் பின் அவர்களில் ஒருத்தி மாளிகைக்குள் திரும்பிச் சென்றுவிட்டாள். மற்ற இருவரில் ஒருத்தி வெளிப்புறப் பூங்காவில் உலாவலா



னாள். மற்றவள் ஓரிடத்தில் உட்கார்ந்துவிட்டாள்.

ம்கேந்திரன் ஒரு மரத்தின் பின் நின்று அந்த இளம் பெண் அருகே வந்தபோது "இளவரசி வித்தியாவதி!" என்று மெல்லிய குரலில் கூப்பிட்டான். அவள் சட்டெனத் திரும்பி குரல் வந்த இடத்தைப் பார்த்தாள். பிறகு அவள் சற்று முன்போய்விட்டு திரும்பி வந்தாள். மறுபடியும் மகேந்திரன் அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிடவே அவள் சற்று நின்று அந்த மரத்தடியே உலாவுவ்துபோல அங்கும் இங்கும் நடக்கலானாள்.

அப்போது மகேந்திரன் மரத்தின் பின்னாலிருந்து எட்டிப் பார்த்தவாறே "இளவரசி" எனவே அவளும் உரக்கப் பேச வேண்டாம் என சைகைச் செய்தாள். இதேசமயம் உட்கார்ந்திருந்த பெண் எழுந்து வரலானாள். அப்போது வித்தியாவதி "நாளை மீண்டும்" எனக் கூறிவிட்டு சட்டெனப் போய் அந்தப் பெண்ணுடன் சேர்ந்து மாளிகைக்குள் போய்விட்டாள்.

அன்றிரவு மகேந்திரன் மிகுந்த எச்சரிக்கையுடன் காவல் புரியலானான். அப்போது எங்கோ ஒரு அறையில் மாளிகைக்குள் விளக்கு எரிவதைக் கண்டான். அது முன் தினம் விளக்கு எரிந்த அறை அல்ல. இதனால் தினமும் அவளது அறை மாற்றப்படுகிறது என்று மகேந்திரனுக்குத் தெரிந்து விட்டது. மேலும் மற்றும் இருவருக்கும் இளவரசியைப்போல ஆடைகளை அணிவிப்பதும் இளவரசியை யாரும் அடையாளம் கண்டு கொள்ளக் கூடாது என்பதற்காகவே எனவும் அவன் அறிந்து கொண்டான்.

சற்று நேரத்திற்குப் பின் மகேந்திரனைக் காண அவனது நண்பனான காவலாளி வந்தான். மகேந்திரனும் "இன்று உன்னைக் காணவே முடியவில்லையே. என்ன விசேஷம்?" என்று கேட்டான். அவனும் "இன்று மேலும் சில பண்டிதர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களை எஜமானரிடம் அழைத்

துப் போக வேண்டும். நீ சற்று கவனமாகவே காவல்புரி'' எனக் கூறிவிட்டுச் சென்றான்.

மறுநாள் காலையில் உணவு விடுதியிலிருந்து இரு பெண்கள் உணவு எடுத்துச் செல்வதை மகேந்திரன் கவனித்தான். அப்போது அவர்களோடு கிழவி இல்லை. அன்று மாலை உலாவ அந்தப் பெண் சற்று முன்னதாகவே மாளிகையிலிருந்து கிளம்பி விட்டாள். அவளோடு ஒரு பெண்ணே வந்தாள். அவள் ஓரிடத்தில் உட்கார்ந்து விடவே இளவரசி பூங்காவில் அங்கும் இங்கும் உலாவியவாறே முன்தினம் மகேந்திரன் மறைந்திருந்த மரத்தின் கீழ் வந்து நின்றாள்.

அப்போது அங்கு தயாராக நின்ற மகேந்திரன் "இளவரசி! என் பெயர் மகேந்திரன். வீரபுரத்திலிருந்து வந்திருக்கிறேன்'' என்றான். அதைக்கேட்ட இளவரசி "நான் இளவரசி வித்தியாவதிதான். நான் இங்கிருந்து எப்படி வெளியேறுவது?'' என்று கேட்டாள். அப்போது மகேந்திரன் "இளவரசியே! உன்னை இங்கே கவர்ந்து வந்து சிறை வைத்தவன் யார்?'' என்று கேட்டான்.

இளவரசியும் "அது எனக்குத் தெரியாது. என்னோடு வந்த அந்தக் கிழவிக்குத்தான் தெரியும்'' என்றாள். அப்போது மகேந்திரன்



"அவள் யார்? எங்கே இருக்கிறாள்?'' என்று கேட்டான். இளவரசியும் "அவள் தன்னை கமலா என்று கூறிக் கொள்கிறாள். அவள் பார்ப்பதற்கு எனக்கு வசந்த மாளிகையில் பணிபுரிந்த கமலம்மாள் போலவே இருக்கிறாள். ஏனோ நேற்றிலிருந்து அவள் என் கண்ணில் படவே இல்லை. எனக்கு தோழிகள் என்று தினமும் யார் யாரோ வருகிறார்கள். எல்லோரும் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருக்கிறார்கள். அவர்கள் என்னோடு அதிகம் பேசுவதும் இல்லை. இதை எல்லாம் பார்த்தால் ஏதோ ஒரு சதி நடப்பதாகவே தெரிகிறது. எனக்கு ஆபத்து வருமுன்



இங்கிருந்து எப்படியாவது வெளியேறி விடவேண்டும்'' என்றாள். பிறகு அவள் அங்கிருந்து போய் உட்கார்ந்திருந்த பெண்ணோடும் அப்போதே வந்த மற்றொருத்தியுடனும் மாளிகைக்குள் சென்றாள்.

மகேந்திரன் இளவரசியைக் கண்டுபிடித்து விட்டதில் மகிழ்ந்து போனான். ஆனால் இளவரசியை ஏன், எதற்கு, யார் அங்கு கொண்டு வந்து சிறை வைத்திருக்கிறார்கள் என்பது தெரியவில்லையே. அவற்றைத் தெரிந்துகொண்டு இளவரசியை மீட்டுச்செல்ல வழி தேட வேண்டும். அதற்கு என்ன செய்வது என்று அவன் யோசிக்கலானான்.

"என்னப்பா பலத்த யோசனை?" என்று கேட்டவாறே அவனது காவலாளி நண்பன் வரவே மகேந்திரன் சட்டெனச் சமாளித்துக் கொண்டு "நீ சொன்னபடி இன்று இங்கு சற்று முன்னதாகவே காவல் புரிய வந்துவிட்டேன். அப்போது யாரோ சில பெண்கள் மாளிகைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவர்கள் யார் என்றுதான் யோசித்துக் கொண்டிருந்தேன்'' என்றான்.

"பெண்களா? நீ அவர்களை இதற்கு முன் பார்த்திருக்கிறாயா?'' என்று அந்தக் காவலாளி கேட்டான். அதுகேட்டு சற்றும் தயங்காத மகேந்திரனும் "இல்லையே! இன்றுதான் முதன் முதலாகப் பாரத்தேன்'' என்றான். அப்போது அக்காவலாளி "அப்படியா? இன்றுதான் நீ அவர்களை முதல் தடவையாயும் கடைசி தடவையாயும் பார்ப்பது. அவர்களை இனி பார்க்க முடியாது. ஏனென்றால் இன்று வந்த பண்டிதர்கள் இன்றே திரும்பிப் போகப் போகிறார்கள். என் எஜமானர் ஒரு பல்லக்கைக் கொண்டு வரும்படிக் கட்டளை இட்டிருக்கிறார். அது அநேகமாக இங்குள்ள இளவரசியை அழைத்துப் போகத்தான் இருக்கும். இளவரசி போனால் இங்கு மற்ற பெண்களுக்கும் வேலை இராது.

அவர்களும் போய்விடுவார்கள்'' என்றான்.

மகேந்திரனும் ''அப்படியா?'' எனவே காவலாளியும் ''ஆமாம். நீ இன்று விழிப்புடன் இருந்து காவல்புரிய வேண்டும். சற்றும் அயர்ந்துவிடக் கூடாது'' என்றான். மகேந்திரனும் சர்வஜாக்கிரதையாக இருப்பதாகக் கூறினான். மகேந்திரன் காவலாளி சொன்னதை அதிக ஆர்வம் காட்டாமல் சாதாரணமாகக் கேட்பது போலவே கேட்டான். ஆனால் இந்த விஷயத்தை எப்படி அப்போதே இளவரசிக்குத் தெரிவிப்பது என்றே அவன் யோசிக்கலானான். நேரம் கழிந்து கொண்டே நள்ளிரவும் ஆயிற்று. மாளிகையில் எல்லா விளக்குகளும் அணைந்து போயின. மகேந்திரன் மெதுவாக மாளிகைக்குள் நுழைந்து ஒரு அறைக்குள் சென்றான்.

அந்த அறை முழுவதும் நிலைக் கண்ணாடிகளே இருப்பது கண்டு அடுத்த அறையில் என்ன இருக்கிறது என்று பார்க்க அவன் சென்றான். அந்த அறையிலும் யாரும் இல்லை. அங்கிருந்து அடுத்த அறைக்குச் சென்றான். அங்கு சில பெண்கள் கட்டில்களில் படுத்திருந்தார்கள். அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அவர்களில் இளவரசி இருக்கிறாளா என்று அவன் பார்த்தான். அங்கு இல்லை என நினைத்து



அடுத்த அறைக்குள் அவன் சென்றான்.

அங்கும் சில பெண்கள் கட்டில்களில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களையும் பார்த்து அவர்களிலும் இளவரசி இல்லை என நினைத்து அதற்கு அடுத்த அறைக்குள் சென்றான். அங்கு சப்பரமஞ்சத்தில் அழகிய பெண் ஒருத்தி படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள்தான் இளவரசி என்று அவன் மனம் கூறியது.

அவளை எழுப்பலாம் என்று நினைத்து அவன் அவளருகே சென்றான். அப்போதுதான் இடது கையில் அணிந்திருந்த மோதிரம் பளிச்சென மின்னுவதை அவன்



ஏற்பாட்டை இந்த மாளிகையின் எஜமானன் செய்து விட்டான்'' என்றான்.

அதுகேட்டு வித்தியாவதி "நான் இங்கிருந்து போகப் போகிறேனா? என்னை எங்கே கொண்டு போகப் போகிறார்களாம்?'' என்று கேட்டாள். மகேந்திரனும் "அது எனக்குத் தெரியாது. ஆனால் நீ அங்கேபோக விரும்புகிறாயா அல்லது இல்லையா என்பதை நான் தெரிந்து கொண்டாக வேண்டும்'' என்றான்.

வித்தியாவதியும் "எனக்கு எங்குமே செல்ல இஷ்டம் இல்லை. நான் என் தாய் தந்தையரைப் பார்க்க வேண்டும். அவர்கள் உள்ள அரண்மனைக்குத்தான் போக விரும்புகிறேன். இதற்கு உன்னால் உதவ முடியுமா?'' என்று கேட்டாள்.

அப்போது மகேந்திரன் "நான் வந்ததே உன்னைத் தேடிக் கண்டு பிடித்து உன்னை உன் பெற்றோரிடம் ஒப்படைக்கத்தான். இதற்காக உன் தந்தையிடமும் அனுமதி பெற்றிருக்கிறேன். உன் வலது கையில் மேல்பகுதியில் ஒரு மச்சம் இருப்பதை அடையாளமாகச் சொல்லச் சொன்னார். இதைச் சொல்லி நான் அவர் சார்பாக வந்திருப்பதை நம்ப வைக்கச் சொன்னார்'' என்றான்.

வித்தியாவதியும் "நீ கூறுவது

கண்டான். அது அவனுக்கு யோகி கொடுத்த மந்திர மோதிரம். அதன் சக்தியால்தான் இவ்வளவு தூரம் தான் வர முடிந்தது என்பதை அப்போது அவன் உணர்ந்தான். அவன் இளவரசியின் தோளை மெதுவாகத் தட்டினான்.

அவள் கண்விழித்து திடுக்கிட்டுப் பார்த்தாள். தன் எதிரே மகேந்திரன் நிற்பது கண்டு அவள் "மகேந்திரா! நீயா? இங்கே எப்படி வந்தாய்'' என்று கேட்டவாறே எழுந்து வந்தாள். மகேந்திரனும் "அதுபற்றிப் பிறகு சொல்கிறேன். நாளைக்கு நீ இங்கிருந்து போகப் போகிறாய். உனக்காக பல்லக்கு வந்து விடும். இதற்கான

சரியே. அப்படியானால் தாமதிக்க வேண்டாமே. இப்போதே நாம் இங்கிருந்து தப்பிப் போய் விடலாமே'' என்று ஆவலுடன் கூறினாள். மகேந்திரனும் ''ஆமாம். தாமதம் செய்யக்கூடாதுதான். தலைவ்ாசல் கதவின் சாவியும் என்னிடம் இருக்கிறது. இந்த நள்ளிரவு வேளையில் நீ வெளியே போக பயப்படுகிறாயா?'' என்று கேட்டான்.

வித்தியாவதியும் ''எனக்கு ஒரு பயமும் இல்லை. நான் இப்போதே கிளம்பத்தயார். இங்கே இருந்தால்தான் நாளைக்கு என்ன நடக்குமோ என்று பயப்படுகிறேன். எனக்குத் துணையாக நீ வரும்போது நான் ஏன் பயப்பட வேண்டும்? கொஞ்சமும் தாமதிக்க வேண்டாம். இப்போதே போய் விடலாம்'' என்றாள்.

மகேந்திரனும் ''அப்படியே செய்யலாம். இந்த மாளிகையைத் தாண்டிச் செல்லும்வரை நீ பேசாமல் என் பின்னால் நடந்து வர வேண்டும். என்னோடு சேர்ந்து வராமல் சற்று தூரம் தள்ளியே நடந்து வா'' என்று கூறி அங்கிருந்து கிளம்பினான். அவன் பின்னாலேயே வித்தியாவதியும் சென்றாள். இருவரும் தலைவாசலை அணுகிவிட்டார்கள்.

எங்கும் சந்தடி இருக்கவில்லை. மகேந்திரன் சத்தப்படுத்தாமல் கதவைத் திறந்தான். முதலில் வித்தியாவதியை வெளியே போகச் சொன்னான். அவள் வெளியேறியதும் அவனும் வந்து வாசல் கதவைப் பூட்டினான். அப்போது வித்தியாவதி ''மாய மாளிகையிலிருந்து வெளியே வந்துவிட்டோம். இனி வீரபுரத்திக்குத்தானே போக வேண்டும்? அங்கு போகும் வழியை நீ அறிவாயா?'' என்று கேட்டாள்.

(தொடரும்)






# கந்தர்வ மலர்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? நீ தீரசேன மன்னன் போல மரணத்தை வென்று உயிர் வாழ நினைக்கிறாயா? ஆனால் அவனது எண்ணம் பகல் கனவாயிற்று. அவன் எதிர்பார்த்தது நடக்கவில்லை. முடிவில் அவன் நாட்டை விட்டுவிட்டுக் காட்டிற்குப் போய் சன்னியாசியாய்க் காலம் கழித்தான். அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள். உனக்கும் சிரமம் தோன்றாமல் இருக்கும்'' எனக் கூறி கதை சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



வெகுகாலத்திற்கு முன் தர்
மாங்கதபுரத்தை தீரசேனன் என்ற
மன்னன் ஆண்டு வந்தான். அவ
னுக்கு கல்யாணம் ஆகியும் ஒரு
குழந்தை கூடப் பிறக்கவில்லை.
அவனும் கிழவனாகி விட்டான்.
தனக்குப் பிறகு நாட்டை ஆளத்
தன் வம்சத்தில் யாரும் இல்லையே
என்ற கவலை அவன் மனதில்
குடிகொண்டது.

ஒரு பௌர்ணமி நிலவில் தன்
மாளிகையின் மேல் தளத்தில் தீர
சேனன் தன் அமைச்சனோடு
பேசிக் கொண்டே அங்கும் இங்
கும் உலாவிக் கொண்டிருந்தான்.
அப்போது அவன் தன் அமைச்ச
னிடம் "பார்த்தாயா! இந்த நில
வில் மலைகளும், மரங்களும், ஏரி
யும், நதியும் எவ்வளவு அழகாகத்
தோன்றுகின்றன? இதை எல்லாம்
விட்டுவிட்டு நான் இறந்து எமலோ
கம் காணப் போகிறேன்! இந்
தப் பணம், அதிகாரம் அந்தஸ்து
இவை எல்லாம் மரணத்தைத்
தடுத்து நிறுத்த முடியாதே" என்
றான் பெருமூச்சுவிட்டவாறே.

அமைச்சனும் அதைக் கேட்டு
பேசாமல் இருந்தானேயொழிய
பதில் எதுவும் கூறவில்லை.

அவர்கள் இருவரும் இப்படிப்
பேசிக் கொண்டிருக்கையில் ஆகா
யத்திலிருந்து ஒரு மலர் மன்னனின்
பக்கம் விழுந்தது. தீரசேனன்
அதை எடுத்து முகர்ந்து பார்த்து
"ஆகா! நல்ல வாசனையாக இருக்
கிறதே. இது என்ன பூ?" என்று
கேட்டான்.

அமைச்சனும் "எனக்கும் தெரிய
வில்லையே. இது ஆகாயத்திலி
ருந்து இங்கே விழுந்திருக்கிறது.
யாராவது கந்தர்வ ஸ்திரீ இத
னைத் தன் தலையில் வைத்துக்
கொண்டு ஆகாய மார்க்கமாய்
போனபோது நழுவி விழுந்திருக்க
லாம். நாளைக்கு நம் ஆஸ்தான
பண்டிதரிடம் இதுபற்றிக் கேட்க
லாம்" என்றான்.

மறுநாள் தீரசேனன் ஆஸ்தான
பண்டிதரிடம் அந்த மலரைக் காட்டி
"இது என்ன மலர்?" என்று
கேட்டான். அவரும் "இதன் பெயர்

அமிர்தவர்த்தினி. இதனை கந்தர்வ ஸ்திரீகள் மிகவும் விரும்பித் தம் தலையில் அணிந்து கொள்வார்கள். இதற்கு வயதானவர்களை இளைஞர்களாக மாற்றும் சக்தி உண்டு. யாராவது ஒரு இளைஞனோ அல்லது இளம் பெண்ணோ இந்த மலரை பயன்படுத்தி தாம் விரும்பும் வயோதிகருக்குத் தன் இளமை போய்விட வேண்டும் என்று கடவுளை வேண்டிக் கொண்டால் அந்த வயோதிகர் இளமை பெற்று விடுவார். இளமையைக் கொடுத்த இளைஞர் முதுமையை அடைந்து விடுவார். இவ்வாறு இம்மலரைப் பற்றி வைத்திய சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது'' என்றார்.

அதைக் கேட்டதும் தீரசேனன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். உடனே அமைச்சனிடம் "எனக்கு எந்த வாலிபன் தன் இளமையைக் கொடுக்க விரும்புகிறானோ அவனுக்கு என் நாட்டில் பாதியைக் கொடுப்பதாக பறைசாற்று'' என்றான். அவ்வாறே நாடெங்கும் அறிவிக்கப்பட்டது. ஆனால் எந்த வாலிபனும் தன் இளமையைக் கொடுக்க முன் வரவில்லை.

அதனால் தீரசேனன் தன் அமைச்சனிடம் "நீ போய் யாராவது ஒரு வாலிபனைத் தேடி அழைத்து வா'' என்றான். அமைச்சனும் யாராவது கிடைப்பார்களா என்று ஒரு



சத்திரத்திற்குப் போனான். அங்கு பார்வையற்ற ஒருவனையும், வலிப்பால் முகம் கோணிப்போன ஒருவனையும் கண்டான். அவர்கள் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடம் அமைச்சன் மன்னனின் அறிவிப்பைக் கூறி "உங்களில் யார் தம் இளமையை மன்னனுக்குக் கொடுத்து பாதி நாட்டை அடையப் போகிறீர்கள்?'' என்று மிடுக்குடன் கேட்டான். இருவருமே "நாங்கள் இப்படியே இருந்து விட்டு போகிறோம். எங்களுக்கு நாடும் வேண்டாம் முதுமையும் வேண்டாம்'' என்று கூறி மறுத்து விட்டார்கள்.

அந்தப் பிச்சைக்காரர்கள் கூடத் தம் இளமையை நாடு பெறும் ஆசையில் விட்டுவிடத் தயாராக இல்லை என்பது கண்டு அமைச்சன் திகைத்தான். பிச்சைக்காரர்களுக்குக் கூட அதுவும் ஊனமுற்றவர்கள் கூட மன்னனுக்காகத் தம் இளமையை விட்டுவிடத் தயாராக இல்லையே எனக் கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். அவன் மனம் சோர்ந்து அரண்மனைக்கு வந்தான்.

அப்போது மன்னன் கொள்ளைக்காரனான சிங்காரத்தை விசாரித்துக் கொண்டிருந்தான். அவன் அன்றுதான் பிடிபட்டவன். மன்னன் அவனைப் பார்த்து "நீ உன் குற்றங்களுக்கு என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான்.

சிங்காரமும் "அரசே! நான் அநியாயமாய் சம்பாதிப்பவர்கள் வீட்டில்தான் கொள்ளை அடித்தேன். அதில் கிடைத்தவற்றை எல்லாம் ஏழை எளியவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டேன். நான் ஸ்திரீகளிடமிருந்து எதையும் திருடவில்லை. அவர்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைத்ததும் இல்லை. என் உயிரே போகும் நிலையில் நான் ஆபத்தில் சிக்கிய போதிலும் யாரையும் கொன்றது இல்லை" என்றான்.

தீரசேனன் சிங்காரம் இப்படிக் கூறும்போது அவனது முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கூறியது எல்லாம் உண்மை



யாகத்தான் இருக்கும் என இவன் நம்பினான். ஆனாலும் அவன் கொள்ளைக்காரன் ஆனதால் அவனைத் தண்டித்தே ஆக வேண்டும். இப்படி அவன் யோசிக்கையில் அமைச்சன் மன்னனை அணுகி "அரசே! இவன் இளைஞன். இவனை தண்டிப்பதற்கு பதிலாக இவனது இளமையைப் பெறலாம். இனிமேல் இந்த விசாரணையை நான் நடத்துகிறேன்" என்று கூறி விட்டு சிங்காரத்தை அணுகினான்.

அவன் சிங்காரத்திடம் "இதோ பார் சிங்காரம்! நீ புரிந்துள்ள குற்றங்களுக்கு உனக்கு மரணதண்டனை தான் விதிக்க வேண்டும்" என்று கூறிக் கொண்டிருக்கும்போதே சிங்காரம் குறுக்கிட்டு "நான் என் இளமையை மன்னனுக்குத் தந்து விடவேண்டும். அப்போதுதான் நான் உயிர் தப்பமுடியும் என்று தானே சொல்லப் போகிறீர்கள். எனக்குப் பாதி நாடும் கிடைக்கும் என்று ஆசை காட்டவும் போகிறீர்கள். அப்படித்தானே" என்று கேட்டான்.

அமைச்சனும் "ஆமாம். நீ இதற்குச் சம்மதிக்கிறாயா?" என்று கேட்டான். சிங்காரம் பலமாகச் சிரித்து "மன்னர் என்னை மனப்பூர்வமாக மன்னித்திருந்தாலோ அல்லது சட்டப்படி என்னை தண்டித்திருந்தாலோ அவரது நேர்மையைப் பாராட்டி இருப்பேன். நான் அவர் நேர்மையாக நடப்பார் என நினைத்து அவருக்கு என் இளமை





இதற்கு பயந்து நான் பேரம் பேசி என் உயிரைக் காத்துக் கொள்ள மாட்டேன்'' என்றான்.

சிங்காரம் கூறியதைக் கேட்டு தீரசேனன் கற்சிலை போலானான். அவமானத்தால் தலைகுனிந்து கொண்டான். வெகு நேரம் வரை எதுவும் பேசாமல் யோசித்துக் கொண்டிருந்தான். பிறகு அவன் சட்டென்று தன் சிம்மாசத்திலிருந்து எழுந்து வந்து சிங்காரத்தருகே வந்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

அவன் சிங்காரத்திடம் ''நீ இன்று என் கண்களைத் திறந்து விட்டாய். நீ ஒரு முனிவருக்குச் சமம். வாழ்க்கையின் கடைசிப் படியிலுள்ள என்னை நீ கடைத்தேற வைக்க வந்தது என் மாபெரும் பாக்கியமே. எனக்குப் பின் இந்த நாட்டை ஆள என் வம்சத்தில் யாருமே இல்லை. எனக்குக் குழந்தையே பிறக்கவில்லை. எனவே உன்னை என் வாரிசாக ஏற்று இந்த நாட்டை உன்னிடம் ஒப்படைத்துவிட்டு நான் சன்னியாசியாகிக் காட்டிற்குப் போய்த் தவம் செய்து மீத வாழ் நாட்களை கழிக்கிறேன்'' என்றான்.

தீரசேனன் தான் கூறியபடியே சிங்காரத்தை நாட்டின் மன்னனாக்கிவிட்டு சன்னியாசியாகிக் கானகத்திற்குச் சென்றான்.

வேதாளம் இந்தக் கதையைக்

யைத் தர வேண்டுமென்றே வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டேன். ஆனால் நான் எதிர்பார்த்தற்கு நேர்மாறாக நடந்திருக்கிறது. மன்னர் சுயநலம் கொண்டு என்னைப் பயன்படுத்தப் பார்க்கிறார். இது மகாக் கேவலமான செயல். எனவே நான் என் இளமையைக் கொடுக்கக் கூடாது என்ற முடிவிற்கு இப்போது வந்து விட்டேன்'' என்றான்.

அதுகேட்டு அமைச்சன் கோபம் கொண்டு ''நீ இப்படி பேசியதற்கே உனக்கு மரண தண்டனை விதிக்கலாமே'' என்றான். சிங்காரம் சற்றும் பயப்படாமல் ''ஆகா! தாராளமாக விதியுங்கள். ஆனால்

கூறி "மன்னனே! தீரசேனன் புத்தி பூர்வமாகத்தான் நடந்து கொண்டானா அல்லது முதுமையின் காரணமாக அவனது புத்தி தடுமாறியதா? ஏனென்றால் ஒரு சாதாரணக் கொள்ளைக்காரனை முனிவர் என்று கூறினானே. மேலும் தன் நாட்டையே அந்தக் கொள்ளைக்காரனுக்கு கொடுத்து விட்டானே. இது முட்டாள்தனம் தானே. கொள்ளைக்காரனை நாட்டின் மன்னனாக ஆக்கியதோடு நில்லாமல் தீரசேனன் சன்னியாசம் மேற்கொண்டு கானகத்திற்கு வேறு சென்று விட்டானே. இதெல்லாம் புத்தி சுவாதீனம் உள்ளவன் செய்யும் செயல்களா? என் இந்த சந்தேகத்திற்கு நீ சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "தீரசேனனின் செய்கைகளைப் பார்த்தால் அவன் எல்லாவற்றையும் நன்கு யோசித்துப் பார்த்து சரியான முடிவையே எடுத்திருப்பது தெரிகிறது. சில சமயங்களில் அறிவாளிகளும் மதி மயங்குவதும் உண்டு. அவ்விதமாகத்தான் தீரசேனன் தன் மரணம் பற்றிக் கவலைப்பட்டான். ஆனால் கொள்ளைக்காரனின் அஞ்சா நெஞ்சமும் அவன் கூறியதும் தீரசேனனின் கண்களைத் திறந்து விட்டன. நேர்மையும் துணிச்சலும் கொண்ட இளைஞன் தனக்கு ஞானோபதேசம் செய்த ரிஷி எனக்கூறி அவனிடம் நாட்டையே கொடுத்து விட்டான். தடுக்க முடியாத மரணத்தை வரவேற்கவே தீரசேனன் சன்னியாசியாகிக் கானகம் சென்றான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# எதிர்பாராத விளைவு!

கண்ணன் என்பவன் மணலூரில் வட்டிக்கடை வைத்து சில ஆண்டுகளில் நிறைய சம்பாதித்து நான்கு மாடி வீட்டையும் கட்டிவிட்டான். இது அதே ஊரில் வட்டிக்கடை நடத்தும் சின்னப்பனுக்கு உறுத்தியது. அவன் அவ்வூர் கிராம அதிகாரியிடம் போய் கண்ணன் மக்களை ஏமாற்றி சட்டத்தை மீறி அநியாய வட்டி வசூலிப்பதாகக் கூறி புகார் செய்தான்.

கிராம அதிகாரிக்கோ அவ்வப்போது கண்ணனிடமிருந்து பணம் கிடைத்து வந்ததால் அந்தப் புகார் மனு பற்றி விசாரிக்கவில்லை. இதனால் சின்னப்பன் ஆத்திரம் கொண்டு மன்னனிடம் போய் கண்ணன் அநியாய வட்டி வாங்குவது பற்றியும் அது பற்றி கிராம அதிகாரியிடம் புகார் கொடுத்தும் அவர் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் போனது பற்றியும் கூறி அவர்களை தண்டிக்கும்படி வேண்டினான்.

மன்னன் சின்னப்பன் கூறியதைக் கேட்டு "சரி, உங்கள் ஊரில் ஒரு பள்ளிக்கூடம் வைத்து ஒரு நல்ல ஆசிரியரையும் நியமிக்கிறேன். இனி நீ போகலாம்" என்றார். அது கேட்டு சின்னப்பன் திடுக்கிட்டு "அரசே! அந்த இருவரையும் தண்டிக்கச் சொன்னால் பள்ளிக்கூடம் வைப்பதாகச் சொல்கிறீர்களே! இது எனக்குப் புரியவில்லையே" என்றான்.

மன்னனும் "உங்கள் ஊரில் எல்லோரும் படிப்பறிவற்ற அப்பாவிகள். அதனால் தான் கண்ணன் அவர்களிடம் அநியாய வட்டி வசூலிக்கிறான். அவனுக்கு கிராம அதிகாரியும் துணை போகிறான். மக்கள் கல்வி அறிவு பெற்று விட்டால் அவர்கள் அவ்வாறு நடக்க முடியாதே!" என்றார்.



# அம்புலிமாமா அனுபந்தம்—51



<u>நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:</u>

## ராக்குருவி

சாதாரணமாய் பறவைகள் இரவு வேளைகளில் சத்தம் செய்யாமல் இருக்கும். ஆனால் ராக்குருவிகள் அவ்வப்போது இரவில் பலமாகக் கத்தும். தம்மைத் தாக்கவரும் எதிரிகளை பயமுறுத்தவே இப்படி அவை கத்துகின்றன எனக் கூறுகிறார்கள். இவை எங்கு போனாலும் கூட்டமாகவே செல்லும்.

இவை சேர்ந்தே உணவு தேடும். ஒன்றாகவே இருந்து முட்டை இடும். குஞ்சு பொறித்து வளர்க்கும். ஒரு குருவியின் இறக்கைகளை இன்னொரு குருவி சுத்தம் செய்கிறது. ஒரு குருவியை யாராவது பிடித்து கூண்டில் அடைத்து விட்டால் மற்ற குருவிகள் சேர்ந்து வந்து பலமாகக் கத்துகின்றன. ஏன் தெரியுமா? தாமும் அக்குருவியோடு சேர்ந்து இருக்கத்தான்.

காட்டு ராக்குருவிகள் 25 செ.மீ. உயரம் உள்ளவை.. மங்கிய ஊதா நிறத்திலுள்ள இவற்றின் வயிறுப்பகுதி இலைப்பச்சை நிறத்தில் இருக்கும். இவற்றின் கண் விழிகள் இளம் மஞ்சள் கோடுகளோடு வெள்ளையாக இருக்கும். மூக்கும் கால்களும் வெங்காயச் சருகு நிறத்தில் இருக்கும்.

இவை மிக உயரமாகப் பறப்பது இல்லை. அடர்ந்த இலைகளுள்ள மரங்களில் இவை தம் கூடுகளைக் கட்டுகின்றன. வடஇந்தியாவிலுள்ள இக்குருவிகளைவிட தென்னிந்தியாவில் தென்படும் இவை சற்று பெரிதாக தென்படுகின்றன. இவை வாழும் தாம் காடுகளுக்கு ஒரு அலாதி அழகையே கொடுக்கின்றன.



# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளி யாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் கருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

*ஆசிரியர்*

## வைக்கம் மகம்மது பஷீரின் 'பாதிமாவோட ஆடு'



தனிப்பட்ட சிறப்புடன் முடியும் நாவல்கள் சிலவும் உண்டு. வைக்கம் மகம்மது பஷீர் எழுதியுள்ள 'பாதிமாவோட ஆடு' என்ற நாவல் இத்தகையது. பஷீர் பெயர் பெற்ற மலையாள எழுத்தாளர்.

எழுத்தாளர் தாமே சொல்வது போன்ற அமைப்பு இந்நாவலில் உள்ளது. பல ஆண்டு கள் பல இடங்களில் இருந்து முடிவில் தம் ஊருக்கே வந்து விடுகிறார் இவர். இதுவரை இவர் பல நாவல்களை எழுதிப் புகழ் பெற்று விடுகிறார்.

இவரது வீடு மிகச் சிறியது. அதில் வசிப்ப வரோ பலர். எழுத்தாளரின் தாய், மனைவி, மக்கள், இரு சகோதரர்கள், தங்கைகள், அவர்களது கணவர்கள். மணமாகாத கடைசி தம்பி. இவர்களோடு குழந்தைகள், கோழி கள், எலிகள், இவை எல்லாம் போதாதென்று வீடு முழுவதும் சுற்றிச் சுற்றி வரும் ஒரு ஆடு வேறு.

ஒருநாள் அந்த ஆடு எழுத்தாளரது படுக்கை மீது ஏறி அவர் எழுதி வைத்திருந்த இரண்டு நூல்களைக் கடித்து மென்று கொண்டிருந்தது. அது கண்டு அவர் ஆச்



சரியப்பட்டார். ஆனால் அவர் அதை விரட்டாமல் அதனையே பார்த்துக் கொண்டே இருந்தார். ஆடு அத்தோடு நிற்காமல் ஐம்பது ரூபாய் மதிப்புள்ள போர்வையைக் கடிக்கப் போயிற்று. அப்போது அவரால் சும்மா இருக்க முடியவில்லை.

இந்த நாவலில் ஆரம்ப முதல் கடைசி வரை ஆட்டைப் பற்றி ஆங்காங்கே குறிப்படப்படுகிறது. ஆசிரியரின் சகோதரி பாதிமாவின் ஆடு அது. பல சமயங்களில் அது பல சம்பவங்களை உருவாக்குகிறது. ஒருமுறை ஒரு சட்டிக்குள் தலையை அது நுழைத்து விட்டு எடுக்க முடியாமல் போகவே அச்சட்டியையே உடைத்து விடுவித்தார்கள்.

அமைதிக்கான சூழ்நிலையில் ஆசிரியர் ஏதாவது எழுதி நினைத்தால் அது முடியாமல் போகிறது. அவரது உறவினர்கள் எல்லாம் ஒருவர் மற்றவருக்குத் தெரியாமல் அவரிடம் பண உதவி கேட்கிறார்கள். பாதிமா தன் ஆடு குட்டி போட்டால் நிறையப் பால் கிடைக்கும் என்றும் அதை விற்றுப் பணம் சேர்க்கலாம் என எண்ணுகிறாள். ஆனால் வீட்டிலுள்ள மற்றவர்கள் அந்த ஆட்டின் பாலைத் திருட்டுத்தனமாகக் கறந்து குடித்து விடுகிறார்கள். அப்போதும் அது வீட்டிலுள்ள எல்லோருக்கும் தேநீர் கொடுக்கப் பாலைக் கொடுத்து விடுகிறது.

இந்த நாவலில் ஆசிரியரின் இளம் பிராய அனுபவங்கள், உறவினர்களின் இளம் போக்குகள் எல்லாம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஒரு உறவினர் பட்டாளத்தில் சேரப் போவதாக அடிக்கடி பயமுறுத்திக் கொண்டே இருப்பாராம். ஒருமுறை இந்த ஆசிரியரைப் பல மாணவர்கள் பார்த்துக் கொண்டே இருந்தது கண்டு அவர் தம் புகழ் மிகவும் பரவிவிட்டதாக எண்ணி மகிழ்ந்தபோது அவர்கள் தன்னைப் பாராமல் தன் பின்னால் உள்ள மாமரத்திலுள்ள மாங்காய்களைத்தான் பார்த்தார்கள் என்று பிறகு அவருக்குத் தெரிந்ததாம்.

நகைச்சுவை ததும்பும் இந்த நாவல் கேரளாவின் சாதாரண முஸ்லீம் குடும்பத்தைப் பற்றி விவரிக்கிறது. ஏழைகளின் சிறு எதிர்பார்ப்புகள், நம்பிக்கைகள் ஆகியவற்றை வெளிப்படுத்துகிறது.

தற்கால மலையாள இலக்கியத்தின் வழிகாட்டியான வைக்கம் மகம்மது பஷீர் 1910ல் பிறந்தவர்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. நம் நாட்டின் தலைநகராக டில்லி எப்போது ஆயிற்று? அதற்கு முன் எந்த நகரம் தலைநகராக இருந்தது?
2. ரோடிஷியாவின் புதிய பெயர் என்ன?
3. மிகப் பழைய விளையாட்டு எது?
4. இந்திய தேசிய காங்கிரஸின் முதல் பெண் தலைவர் யார்?
5. முதன்முதலில் 'ரோபட்'டை எப்போது உருவாக்கினார்கள்?
6. 'ஜெய்ஹிந்த்' கோஷத்தை அளித்தவர் யார்?
7. இந்தியத் துணைத் தலைவர் வகிக்கும் மற்றொரு பதவி எது?
8. வரிக் குதிரையின் சிறப்பு என்ன?
9. 'ராஜதரங்கிணி' எந்த அரசர்களைப் பற்றிக் கூறுகிறது?
10. இந்தியாவில் முதன்முதலாக தபால்தலைகளை வெளியிட்டது எப்போது?
11. சாக்லெட் தயாரிக்கும் ஒரு நிறுவனம் தனக்கென ஒரு ஊரையே அமைத்துக் கொண்டது. அவை யாவை?
12. இத்தாலியின் தேசிய மலர் எது?
13. 'கீத கோவிந்தம்' எழுதியவர் யார்?
14. 'டாஸ் காப்பிடல்' என்ற நூலை யார் எழுதினார்?
15. அமெரிக்க அதிபரின் வெள்ளை மாளிகைக்கு ஏன் வெள்ளை நிறம் அடிக்கப் பட்டது?

## விடைகள்

1. 1911ல்; கல்கத்தா.
2. ஜிம்பாப்வே.
3. போலோ.
4. டாக்டர் அன்னிபெசண்ட்.
5. 1962ல் அமெரிக்க யுனிமேஷன் நிறுவனம்.
6. நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்.
7. மாநிலங்கள் அவைத் தலைவர்.
8. எந்த இரு வரிக் குதிரைகளுக்கும் ஒரே விதக் கோடுகள் இராது.
9. காஷ்மீர மன்னர்கள்.
10. 1852ல்.
11. காட்பரி; போர்ன்வில்.
12. செவ்வரளி.
13. ஜெயதேவர்.
14. கார்ல் மார்க்ஸ்.
15. தீ விபத்தில் கருகிய பகுதிகளை மறைக்க.



# மாலாவின் திருமணம்

கல்லூரில் கண்ணப்பன் என்ற பணக்காரனுக்கு மாலா என்ற மகள் இருந்தாள். அவள் மிகவும் அழகாக இருந்ததால் பல பணக்காரர்கள் அவளைத் தம் வீட்டு மருமகளாக்கிக் கொள்ள போட்டி போட்டார்கள். கண்ணப்பன் அவர்களில் ஒருவரின் மகனைத் தேர்ந்தெடுத்து மணம் முடித்துவிட எண்ணினான்.

மாலாவோ கண்ணப்பனிடம் கணக்கனாகப் பணிபுரியும் மாதவனை மணக்க விரும்பினாள். தன் தந்தை தனக்கு யாரையோ மணம் செய்து வைக்க முயல்வதைக் கண்டு அவள் தான் மாதவனைத் தவிர வேறு யாரையும் மணக்க முடியாது என்று கூறிவிட்டாள்.

மாலா இப்படிக் கூறியது கேட்டுக் கண்ணப்பனுக்குக் கோபம் வந்தது. அவன் தன் மனைவியிடம் "நீயாவது நல்ல வார்த்தை சொல்லி நான் தீர்மானிக்கும் பணக்காரப் பையனைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்" என்றான். மாலாவின் தாயாரும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் மாலா மாதவனைத் தவிர வேறு யாரையும் மணக்க முடியாது என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டாள்.

மாதவன் அனாதை. சிறுவயதிலிருந்தே கண்ணப்பன் வீட்டில் வளர்ந்து அவனுக்கு எல்லா விதத்திலும் உதவி அவனது கணக்கு வழக்குகளையும் பார்த்து வந்தான். மாலா மாதவனைத்தான் மணந்து கொள்ளப் போவதாக கூறியதும் கண்ணப்பனுக்கு எரிச்சலாக இருந்தது. தன் கீழ் வேலை செய்யும் ஒருவனைத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொள்வது தனக்கு கௌர

—சுதா கிருஷ்ணசாமி—

வக் குறைவு எனக் கண்ணப்பன் எண்ணினான். அதனால் அவன் பணத்தைக் கையாடி விட்டான் எனப் பொய்க் குற்றம் சாட்டி அவனை வேலையிலிருந்து நீக்கி வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். மாதவனும் அந்த ஊரை விட்டே போய்விட்டான்.

இதற்குப் பின் கண்ணப்பன் மாலாவின் திருமணத்தை நிச்சயிக்க முயன்றது நடக்கவில்லை. மாலாவும் அவளது தாயும் ஒரே பிடிவாதமாக மாதவனைத் தவிர வேறு யாரையும் மாப்பிள்ளையாக ஏற்க முடியாது என்று கூறி விடவே கண்ணப்பன் வேறு வழியின்றி மாதவனைத் தேடலானான். ஆனால் அவன் எங்கே போனான் என்று கூடத் தெரியவில்லை.

தன் பிடிவாதத்தால் தன் மகளின் வாழ்க்கை பாழாகிறதே என்ற கவலையில் கண்ணப்பன் படுத்த படுக்கையாகி விட்டான். அவன் நாளுக்கு நாள் பலஹீனமாவதைக் கண்ட அவனது மனைவி பயந்து "இதோ பார் மாலா! மாதவன் எங்கே இருக்கிறான் என்று கூடத் தெரியவில்லை. இது வரை அவன் தன் இருப்பிடத்தை யும் அறிவிக்கவில்லை. எனவே அவனைப் பற்றி இனியும் யோசித்துக் காத்துக்கொண்டிருப்பதில் எந்தப் பயனும் இல்லை. உன் தந்தை உன் திருமணம் எப்படியாவது நடக்க வேண்டுமே என்ற கவலையில் படுத்த படுக்கையா



கக் கிடக்கிறார். அவர்மீது இரக்கப் பட்டாவது அவர் குறிப்பிடுப வனைக் கல்யாணம் செய்து கொள்'' என்றாள். இப்படி மாலா வுக்கு நல்லவிதமாய்ச் சொல்லி ஒரு பணக்கார வீட்டு சம்மந்தத் திற்கு இணங்க வைத்தாள். இதைக் கேட்ட கண்ணப்பன் மகிழ்ந்து போனான். அவனது உடல்நிலை யும் தேறலாயிற்று.

மாலாவின் தாய் குறிப்பிட்ட பணக்காரன் தர்மலிங்கம் என்ப வன். அவன் கோடீஸ்வரன். கல் லூரிலிருந்து வெகுதூரத்திலுள்ள வேலூரில் வாழ்பவன். கண்ணப் பன் தன்னோடு தன் ஊர்ப்பிர முகர் ஒருவரை அழைத்துக் கொண்டு தர்மலிங்கத்தைக் கண்டு பேச வேலூருக்குச் சென்றான்.

தர்மலிங்கமும் வந்த கண்ணப் பனையும் அவனது நண்பனையும் வரவேற்று உபசரித்தான். பிறகு அவன் "என் மகனை அழைத்து வரச் சொல்கிறேன். அவன் வியா பார விஷயமாக ஒருவரைச் சந்திக் கப் போயிருக்கிறான். இப்போதே அவனை அழைத்து வர என் கணக் குப் பிள்ளையை அனுப்புகிறேன்'' எனக் கூறி தன் கணக்குப் பிள் ளைக்குக் குரல் கொடுத்தான்.

வந்த கணக்குப் பிள்ளையைக் கண்டு கண்ணப்பன் திகைத்துப் போனான். ஏனென்றால் அவன் மாதவனே. மாதவனும் கண்ணப் பனை வணங்கி எல்லோருடைய நலனையும் விசாரித்தான். அது



கண்டு தர்மலிங்கம் "இவரை உனக்கு முன்பே தெரியுமா? இவர் தம் மகளை என் மகனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க விரும்புகிறார். நீ போய் உடனே என் மகனை அழைத்து வா" என்றார்.

மாதவனும் "உங்கள் மகனை இப்போது அழைத்து வர முடியாது. அவர் இப்போது லீலாவின் வீட்டில் குடிமயக்கத்தில் இருக்கிறார். இதனை இப்போதுதான் நேற்று அவனுடன் சூதாடிய பொன்னன் சொல்லிவிட்டுப் போனான்" என்றான்.

அதைக்கேட்டு தர்மலிங்கம் மாதவனை எரித்து விடுபவன் போலப் பார்த்தான். பிறகு அவர் கண்ணப்பனிடம் "அவன் சொல்வதை நம்பாதீர்கள். ஏதோ உளறுகிறான்" என்றார்.

கண்ணப்பனோ "எனக்கு மாதவனை நன்றாகத் தெரியும். அவன் என் வீட்டிலேயே வளர்ந்து பெரியவன் ஆனவன். அவன் உண்மையைத்தான் கூறுவான். பொய் சொல்லமாட்டான்" என்றான்.

அதுகேட்டு தர்மலிங்கம் கோபம் கொண்டு மாதவனைத் தாக்கப் போனான். அப்போது கண்ணப்பனும் அவனது நண்பனும் தடுத்து "அவன் உண்மையைச் சொன்னதால்தானே ஆத்திரப்படுகிறீர்கள்? நல்லவேளை. மாலா தப்பினாள்" என்று கூறினார்கள்.

கண்ணப்பன் மாதவனின் கைகளைப் பிடித்துக் கொண்டு "என்னோடு வந்து விடு. உன்னை எங்கே எல்லாம் தேடினேன் தெரியுமா? மாலா உன் நினைவாக இருக்கிறாள்" என்றான்.

கல்யாணம் பேசப் போன கணவன் மாதவனோடு வந்தது கண்டு கண்ணப்பன் மனைவி ஆச்சரியப் பட்டாள். மாலாவின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. கண்ணப்பனும் வேலூரில் நடந்ததைக் கூறி அப்போதே மாதவனைத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொண்டான்.






வெகுகாலத்திற்கு முன் ரஷ்யாவில் ஒரு கிழவி இருந்தாள். அவளுக்கு இரண்டு மகன்கள். ஒருவன் போரில் இறந்து விட்டான். மற்றவன் தூரத்து ஊர் ஒன்றில் வேலை பார்த்து வந்தான்.

ஒருநாள் மாலை ஒரு போர் வீரன் அக்கிழவியின் வீட்டிற்கு வந்தான். கிழவி அவனிடம் "யாரப்பா நீ?" என்று கேட்கவே அவனும் "நான் மேலுலகிலிருந்து வருகிறேன். நானும் உன் மகனும் ஒரே அறையில்தான் இருக்கிறோம். அவன் உன்னைப் பார்த்து வரச் சொன்னான்" என்றான்.

கிழவி அவனை அன்புடன் வரவேற்று "என் மகன் உன்னோடா இருக்கிறான்? சௌக்கியமாக இருக்கிறானா? உடம்புக்கு ஒன்றும் இல்லையே" என்று கேட்டாள்.

அவனும் "சௌக்கியமாகவே இருக்கிறான். என்னோடு அவன் இருப்பதால் அவனை அக்கறையுடன் பார்த்துக்கொள்கிறேன். நான் இங்கே போவது தெரிந்ததும் உன்னைப் பார்த்துவிட்டுத் தனக்குத் தேவையான பொருள்களையும் உன்னிடம் கேட்டு வாங்கி வரச் சொன்னான்" என்றான்.

கிழவியும் "அவனுக்கு என்னென்ன வேண்டுமாம் சொல்" எனவே போர்வீரனும் "கம்பிளி ஆடைகளும், செலவுக்கு ஆயிரம் வெள்ளிகளும் வேண்டுமாம். பாவம் பணமுடை. நான்கூட அவனுக்கு அவ்வப்போது பணம் கொடுத்தும் உதவி வருகிறேன்" என்றான்.

கிழவியும் "ரொம்ப சந்தோஷம். இன்றிரவு இங்கேயே சாப்பிடு. நாளை நீ போகும்போது அவனுக்குக் கொஞ்சம் புத்தாடைகளும்

—ரஷ்ய நாட்டுப் பழங்கதை—




ஆயிரம் வெள்ளி நாணயங்களும் கொடுக்கிறேன். அவற்றை அவனிடம் சேர்த்து விடு'' என்றாள். அந்த வீரனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான். அன்றிரவு அங்கு தங்க விட்டு மறுநாள் காலை கிழவி கொடுத்த ஆடைகளுடனும் பணத் துடனும் கிளம்பிப் போய் விட் டான்.

மறுநாள் நகரிலிருந்து வந்த கிழவியின் மகன் நடந்ததை எல் லாம் கேட்டு விட்டு ''அம்மா! நீ ஒரு ஏமாளியாக இருக்கிறாயே. யாரோ ஏதேதோ புளுகி உன்னிட மிருந்து நல்ல துணிகளையும் பணத்தையும் தட்டிக் கொண்டு போய் விட்டான். உன்னைப் போல ஏமாளிகள் இருக்கிறார் களா என்று பார்த்து வருகிறேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினான்.

அவன் நடந்து நடந்து ஒரு ஜமீன்தாரரின் மாளிகையைக் கண்டான். அதன் முன் ஒரு பன்றி தன்குட்டிகளுடன் நிலத்தை கொத் திக் குதறிக் கொண்டிருந்தது. அவன் தாய்ப்பன்றியை விழுந்து வணங்கினான்.

அதை சன்னல் வழியாகப் பார்த்த ஜமீன்தாரரின் மனைவி தன் பணிப்பெண்ணிடம் ''அதோ பார் ஒரு பைத்தியத்தை! பன்றிக்கு வணக்கம் போடுகிறான். நீ போய் யாரென்று விசாரி'' என்று சொல்லி அனுப்பினாள்.

அவளும் போய்விட்டு வந்து ஜமீன் தாரிணியிடம் ''அவன் மகளுக்குக் கல்யாணமாம். மணப் பெண்ணின் தோழிகளாக இருக்க அந்தப் பன்றிக் குட்டிகளை அழைத் துப் போக விரும்புகிறானாம்'' என்றாள்.

அது கேட்டு ஜமீன்தாரிணி ''நல்ல முழுப்பைத்தியம் போலிருக் கிறது. கொஞ்சம் வேடிக்கை பார்க்க லாம். ஒரு குதிரை வண்டியை அவனுக்குக் கொடுத்து அப்பன்றி களை ஏற்றிக் கொண்டு போகச் சொல். என்ன செய்கிறான் பார்க்க லாம்'' என்றாள். பணிப்பெண் ணும் தன் எஜமானியின் கட்ட ளையை நிறைவேற்றினாள்.

கிழவியின் மகன் குதிரை வண்டி கிடைத்ததும் அதில் தாய்ப் பன்றியையும் அதன் குட்டிகளை யும் கட்டித் தூக்கிப் போட்டு வண்டியில் உட்கார்ந்து வேகமாக ஓட்டிக் கொண்டு போனான். அதைக்கண்டு ஜமீன்தாரிணி கை கொட்டிச் சிரித்தாள்!

சற்று நேரமானதும் ஜமீன்தாரிணி யைக் காண ஜமீன்தாரர் வந்தார். அவரிடம் ஜமீன்தாரணி பன்றியை ஒருவன் வணங்கி அதனையும் அதன் குட்டிகளையும் மணப்பெண் ணுக்குத் தோழிகளாக இருக்க எடுத்துப் போனதையும் அவனுக் குத் தான் ஒரு குதிரை வண்டி கொடுத்து உதவியதையும் கூறினாள்.



அதைக் கேட்ட ஜமீன்தாரர் "யார் அவன்?" எனக்கேட்கவே அவளும் "எனக்குத் தெரியாது" என்றாள். அப்போது ஜமீன்தாரர் "சரிதான். உன்னை யாரோ ஏமாற்றி ஒரு குதிரை வண்டியை யும் பன்றிகளையும் தட்டிக் கொண்டு போய் விட்டான். நான் போய் அவனைப் பிடித்து இழுத்து வருகிறேன்" என்று கூறித் தன் குதிரை மீதமர்ந்து சென்றார்.

காட்டு வழியே சென்ற கிழவி யின் மகன் தனக்குப் பின்னால் கொஞ்ச தூரத்தில் குதிரைக் குளம் பொலி கேட்டு ஜமீன்தாரர்தான் தன்னைப் பிடிக்க வருவதாகத் தெரிந்து கொண்டான். உடனே அவன் தன் குதிரை வண்டியையும் பன்றிகளையும் ஒரு அடர்ந்த புத ரில் ஒளித்து வைத்துவிட்டுப் பாதையில் வந்து தன் தொப்பி யைக் கீழே வைத்து அதனருகே உட்கார்ந்தான்.

அப்போது அங்கு வந்த ஜமீன் தாரர் அவனிடம் "இவ்வழியே யாராவது ஒருவன் ஒரு குதிரை வண்டியில் பன்றிக் குட்டிகளை ஏற்றிக்கொண்டு போனதைப் பார்த் தாயா?" என்று கேட்டார். அவனும் "பார்த்தேன். பத்து நிமிடங்களுக்கு முன் போனான்" என்றான்.

ஜமீன்தாரரும் "அவனைப் பிடிக்க வேண்டுமே. நான் வீட் டில் இல்லாதபோது அவன் என்

மனைவியை ஏமாற்றி ஒரு குதிரை வண்டியையும் சில பன்றிகளை யும் தட்டிக்கொண்டு ஓடிவிட் டான். அவனைப் பிடித்துக் கட் டிப்போட்டுத் தோலை உரிக்க வேண்டும். இந்த மாதிரி ஏமாற் றுப்பேர்வழிகளுக்கு அதுதான் சரியான தண்டனை'' என்றார்.

கிழவியின் மகனும் ''நீங்கள் சொல்வது மிகவும் சரியே. அவ னைப் பிடித்துச் சரியான தண் டனை கொடுங்கள். இந்த நல்ல காரியத்திற்கு நானும் உதவுகி றேன்'' என்றான்.

அதைக்கேட்ட . ஜமீன்தாரரும் ''நான் வேட்டைக்குப்போய்க் களைத்து வந்தபோது இப்படி நடந்ததால் சற்றும் இளைப்பாறா மல் கிளம்பி வந்துவிட்டேன். இப்போது நான் களைத்துப் போய்விட்டேன். நீ போய் பிடித்து வருகிறாயா? உனக்கு என் குதிரையும் நூறு வெள்ளியும் கொடுக்கிறேன்'' என்றார்.

அவனும் "போகிறேன். ஆனால் என் எஜமானரின் ஆந்தையைக் காவல் காக்க வேண்டுமே. அது இந்தத் தொப்பிக்குள் பத்திரமாக இருக்கிறது. இதை நீங்கள் பார்த் துக் கொள்வதாக வாக்களித்து பணத்தையும் குதிரையும் கொடுத் தால் நான் போய் அவனைப் பிடித்து வருகிறேன்'' என்றான்.

ஜமீன்தாரரும் அதற்கு இணங் கித் தன் குதிரையையும் பணத்தை யும் கொடுத்து விட்டு அந்தத் தொப்பியின் பக்கம் உட்கார்ந் தார். கிழவியின் மகன் குதிரை. யைச் சுற்றி ஓட்டிப் போய் புதரில் மறைத்த குதிரை வண்டியையும் பன்றிகளுடன் ஓட்டிக் கொண்டு தன் ஊர் போய்ச் சேர்ந்தான்.

வெகு நேரம் வரை காத்துப் பார்த்து ஜமீன்தாரர் சந்தேகப் பட்டு தொப்பியை தூக்கிப் பார்த் தார். அங்கு ஒன்றும் இல்லாதது கண்டு தானும் ஏமாந்தது கண்டு தம் மாளிகைக்குத் திரும்பினார்.






அனுமார் வெகு வேகமாகச் சென்று சந்திரசேனை உள்ள மாளிகையை அடைந்தார். அந்த அழகிய மாளிகையைக் காவல் காக்க யாரும் இருக்கவில்லை. எல்லோரும் காளி கோவிலுக்குப் போயிருந்தார்கள். தலைவாசலில் பயங்கர ராட்சஸப் பாம்பு மட்டும் காவலுக்கு இருந்தது.

அனுமார் அந்தப் பாம்பைப் பார்த்தார். அதுவும் அவரைப் பார்த்து விட்டது. உடனே அது புஸ்ஸெனச் சீறி அனுமாரைத் தாக்க வந்தது. அதன் சிவந்த கண்களும், வாயிலிருந்து கிளம்பிய புகையும் அங்கு பயங்கர சூழ்நிலையை உருவாக்கின. அது அனுமாரை விழுங்கத் தன் வாயைத் திறந்தது. அனுமார் அதனைத் தாக்கிக் கொல்லப் போகும்போது அம்மாளிகையின் மேல்தளத்திலிருந்து ஒரு இனிய பெண் குரல் அலறுவது கேட்டது.

அனுமார் உடனே தன் உருவை மிகச் சிறிதாக ஆக்கிக் கொண்டு அந்தப் பாம்பின் வாயினுள் புகுந்து அதன் வயிற்றைக் கிழித்து அதனைக் கொன்றவாறே வெளியே வந்தார். அவர் வேகமாக மாளிகைக்குள் ஓடி அந்தப் பெண் குரல் ஒலித்த இடத்திற்குச் சென்றார். அப்போது யாரோ சவுக்கால் அடிக்க, மறுபடியும் பெண்ணின் அலறல் கேட்டது.



அது சந்திரசேனையாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்து அந்த இடத்திற்குச் சென்றார். அது ஒரு அறை. உள்ளே தாளிடப் பட்டிருந்தது. அனுமார் அந்த அறையின் சன்னல் வழியாகப் பார்த்தார். சந்திரசேனையைக் கண்டகி சவுக்கால் அடித்துக் கொண்டிருப்பதை அவர் கண்டார்.

அவள் "எங்கள் மயில் ராவ ணன் உன்னை ஏனோ இங்கு கொண்டு வந்தான்? நீ நாசம் செய்யும் கிருமிபோல இருக்கிறாய். காளி கோவிலுக்குள் யாரை அனுப்பினாய்? சொல். சொல்லா விட்டால் உன் கழுத்தை நெரித் துக் கொன்று விடுவேன்" என்று பயங்கரமாக உருமினாள்.

அனுமார் உடனே தன் வாலை நீளமாக்கி சன்னல் வழியாக உள்ளே விட்டார். அது கண்டகி யின் கழுத்தைச் சுற்றிக் கொண்டு இறுக்கலாயிற்று. அவள் திக்கு முக்காடி கீழே விழுந்து இறந்து போனாள்.

அனுமார் அந்த அறையின் கதவை உதைத்துத் தள்ளித் திறந்து கொண்டு உள்ளே சென்றார். அவர் சந்திரசேனையை வணங்கி அங்குள்ள அபாயகர நிலையை ஒரு சில சொற்களில் கூறினார். மயில் ராவணனைக் கொல்ல என்ன வழி என்று அவனிடம் கேட்டார்.

இராமரின் பெயரைக் கேட்ட துமே சந்திரசேனை தான் அது வரை பட்ட கஷ்டங்களை எல்லாம் மறந்தாள். அவள் அனுமாரை வணங்கி "அனுமாரே! நான் அவ னது உயிர் நிலையின் ரகசியத் தைக் கூறுகிறேன். ஆனால் நீ இராமர் மயில் ராவணனைக் கொன்றதும் அவரை என்னிடம் அழைத்து வருவதாக வாக்குறுதி அளிக்க வேண்டும்" என்றாள்.

அனுமாரும் அவள் கேட்ட வாக்குறுதியை அளித்தார். அவ ளும் அனுமாரிடம் மயில் ராவண னின் உயிர்நிலை பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருக்கும் இடத்தைக் கூறினாள். உடனே அனுமார் அங்

கிருந்து கிளம்பி ஏழு கடல்களைத் தாண்டி நெருப்பாய் ஒளிவிடும் தாமரை உள்ள இடத்தை அடைந் தார். அக்கினி தேவனை அவர் துதித்து அவர் அம்மலருள் நுழைந்து அதன் மகரந்தத் தாள்களைக் கண் டார். அங்கு பயங்கர பாம்புகளும் பிசாசுகளும் இருந்தன. அவர் அவற்றை எல்லாம் அடித்து நொறுக் கியவாறே குகைப் பகுதியை அடைந் தார். குகையை ஒரு பயங்கர பாம்பு பாதுகாத்துக் கொண்டிருந்தது.



அது அனுமாரைப் பார்த்து "இங்கே இருவரால்தான் வரமுடி யும். ஒன்று மயில் ராவணன். மற்றவர் மிகவும் சக்தி வாய்ந்த மகான். நீதான் அந்த மற்றவனா?" என்று கேட்டது. அனுமார் பலமா கச் சிரித்து "ஆமாம். அந்த சக்தி வாய்ந்த மகான் நான்தான். எனக்கு வழி விடு" என்றார்.

அப்போது அது "அப்படியா! உன் சக்தி எப்படிப்பட்டது என்று பார்க்கிறேன்" எனவே அனுமார் "இதோ பார்" என்றவாறே ஒரு குத்து விட்டார். அதைத் தாங்க முடியாமல் அது "ஆமாம். நீங்கள் சக்தி வாய்ந்த மகான்தான். உங்க ளால் எனக்கு சாபவிமோசனம் ஏற்பட்டது. இனி நான் என் இருப் பிடமாகிய சிவபிரானிடம் போகி றேன்" என்று கூறி மறைந்து விட்டது.

அனுமார் குகைக்குள் சென் றார். அங்கு உயரமான இடத்தில் வட்ட வடிவில் ஒரு பேழை இருந் தது. அதன் மூடி தகதகவென்று நெருப்பு போல இருந்தது. அவர் அதனருகே சென்றபோது நெருப் புப் பிழம்புகள் கிளம்பி அவரை எரித்து விடுவது போலத் தாக் கின. அனுமார் உடனே வாயால் பலமாக ஊதி அந்த நெருப்பை அணைக்கலானார். அப்போதும் அது அடங்காது போயிற்று.

அப்போது அவர் கைகூப்பி "அக்கினி தேவா! நான் தங்களது நண்பனான வாயுவின் மகன். எனக்கு உதவுங்கள்" என வேண்டி னார். உடனே அந்த நெருப்பு அணைந்து போயிற்று. அந்தப் பேழையின் மூடியிலிருந்து ஒரு



குரல் கேட்கவே அனுமார் அதைக் கவனமாகக் கேட்கலானார்.

அந்தக் குரல் "அனுமானே! உனக்கு ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்லவே இப்படி எல்லாம் செய்தேன். நீ இதிலுள்ள ஐந்து வண்டுகளையும் ஒரே சமயத்தில் ஒழிக்க வேண்டும் அதற்காக ஐந்து முகங்கள் கொண்டு ஐந்து வண்டுகளையும் ஐந்து வாய்களில் போட்டு மென்று விட வேண்டும். இதை ஞாபகம் வைத்துக் கொள்" என்றது.

அனுமாரும் அக்கினி தேவனை வணங்கி அந்தப் பேழையை எடுத்துக் கொண்டு வேகமாக இராமரும் லட்சுமணனும் இருக்கும் இடத்திற்கு வந்தார். அவர்கள் இருவரும் அப்போதும் பல மயில் ராவணன்களுடன் போராடிக் கொண்டிருந்தார்கள். அனுமார் சிங்கம் போல கர்ஜனை செய்து மயில் ராவணன் முன் நின்று தான் கொண்டு வந்த பேழையை எடுத்தார்.

அதை அவர் மயில் ராவணனிடம் காட்டி "அடே மயில் ராவணா! இதோ பார் உன் உயிர் நிலை உள்ள பெட்டி. உன் உயிர் இப்போது என் கையில் உள்ளது. இப்போதாவது திருந்தி இராமரையும் இலட்சுமணனையும் விட்டு விடு. அவர்களிடம் மன்னிப்பு கேள்" என்றார்.

அனுமாரின் கையிலிருந்த பேழையைப் பார்த்ததும் அவன் நடுநடுங்கிப் போனான். அவன் அனுமாரைப் பார்த்து "அடே குரங்கே! இந்தப் பேழையை எடுத்துக் கொண்டு வந்தால் என் உயிர் போய்விடும் என்று நினைத்து விட்டாயா? நீ மட்டும் பேழையைத் திறந்தால் அதிலுள்ள வண்டுகள் உன்னையும் இராமரையும் இலட்சுமணனையும் கொட்டிக் கொன்று விடும். நீ உயிர் தப்ப வேண்டுமானால் மரியாதையாக அந்தப் பேழையைக் கீழே வைத்து விடு" என்று கூறினான்.

அனுமார் அதைக் கேட்டு பலமாகச் சிரித்து "அடே! தூங்கிக்



கொண்டிருந்த இராமரையும் இலட்சுமணனையும் நீ கவர்ந்து வந்ததற்கு உனக்குத் தக்க தண்டனை கொடுத்தே ஆக வேண்டும். நீ உயிர் தப்ப ஏதாவது மாயா ஜாலம் செய்வதானால் செய்து பார் அப்போதும் நீ தப்ப முடியாது'' என்றார்.

அனுமார் சற்றும் பயப்படாதது கண்டு மயில் ராவணன் ''கண்டகி! சந்திர சேனையைக் கொன்று விட்டு உடனே ஓடிவா'' என்று உரக்கக் கத்தினான். அனுமார் பலமாகச் சிரித்து ''கண்டகியையா கூப்பிடுகிறாய்? அவள் எப்போதோ எமலோகம் போய் விட்டாளே. அவள் சந்திரசேனையைக் கொல்ல முயன்ற போது நான்தான் அவளைக் கொன்றேன். இனி எங்கே அவள் இருக்கிறாள்?'' என்றார்.

மயில் ராவணனுக்கு அந்தப் பேழை அனுமாருக்கு எப்படிக் கிடைத்தது என்று தெரிந்து விட்டது. அதனால் ஆத்திரம் கொண்டு அவன் கைக்கு கிடைத்ததை எல்லாம் எடுத்து இராமர் மீதும் இலட்சுமணன் மீதும் விட்டெறிந்தான். அவனது உடலிலிருந்து சொட்டிய ஒவ்வொரு துளி ரத்தத்திலிருந்து ஒரு மயில் ராவணன் வீதம் வந்து கொண்டே இருந்தான். அவர்கள் எல்லோரும் இராமரையும் இலட்சுமணனையும் சூழ்ந்து கொண்டார்கள்.

இதைக் கண்ட அனுமார் சிவபிரானை தியானித்து ஐந்து முகங்கள் கொண்ட உருவம் எடுத்துக் கொண்டார். பிறகு அவர் பேழையைத் திறந்தார். அதிலிருந்து ஐந்து பயங்கர வண்டுகள் பலமாக ரீங்காரம் செய்தவாறே அனுமாரின் ஐந்து முகங்களைக் கொட்ட வந்தன.

அனுமார் தன் ஐந்து முகங்களாலும் பலமாக மூச்சை இழுத்து வாய்களைத் திறக்கவே அந்த வண்டுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முகத்தினுள் சென்றன. அனுமார் சட்டென வாய்களை மூடி ஒரே சமயத்தில் அந்த வண்டு



களை நன்கு மென்று விட்டுத் துப்பினார். மாய மயில் ராவணர் கள் எல்லாம் ஈக்களாக மாறி துவண்டு தரை மீது விழுந்து இறந்தனர்.

அது கண்டு மயில் ராவணன் பயந்து ஓடத் தொடங்கினான். அப்போதும் அவன் இராமரையும் இலட்சுமணரையும் தாக்கியவாறே தான் ஓடலானான். அப்போது இராமர் ஒரு அம்பை எய்து அவன் தலையை உடம்பிலிருந்து வேறாகப் போய் விழச் செய்தார். மயில் ராவணன் இறந்து விழுந்தான்.

ஐந்து முக ஆஞ்சனேயர் மீதும் இராமர் மீதும் இலட்சுமணன் மீதும் மலர்மாரி பொழிந்தது. தேவர்களும் பிரம்மாவும், சிவனும் அங்கு கூடினார்கள். பிரம்மா இராமரைப் பார்த்து "இராமா! இந்த மயில் ராவணன் கால நேமியின் அம்சத்தோடு பிறந்தவன். அனுமாரின் உதவி கொண்டு நீ அவனைக் கொன்றாய். அனுமான் சிவனின் அம்சத்தோடு பிறத்தவன். அதனால்தான் அந்தப் பேழையை ஏழுகடல் தாண்டி அவனால் எடுத்து வர முடிந்தது" என்றார்.

சிவபிரான் அனுமாரை ஆசீர் வதித்து "அனுமானே! உன் சக்தியும் அறிவும் அபாரமானவை. மயில் ராவணனைக் கொல்வது என்பது சாதாரண விஷயமல்ல. அதை நீ வெற்றிகரமாக முடித்துக் கொடுத்தாய். ஐந்து முகங்கள் கொண்ட பஞ்சமுக ஆஞ்சனேயரான உன்னை வழிபடுபவர்களுக்கு எந்தப் பேய், பிசாசு, பூதம் ஆகியவற்றின் பயமே இராது" என்றார்.

அனுமார் எப்போதும் போன்ற உருவை எடுத்து பிரம்மாவையும் சிவனையும் வணங்கினார். பிரம்மாவும் சிவனும் மற்ற தேவர்களும் இராமரையும் இலட்சுமணரையும் ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்கள்.

பிரம்மா போவதற்கு முன் பாதாள லோகத்திற்கு மச்ச வல்லபனை மன்னனாக்கும்படிச் சொன்னார். பிறகு அவர் "மன்னன் என்

பவன் ஆரம்பத்தில் பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டி வந்தாலும் பிறகு தானும் சுகப்பட்டு மக்களையும் சுகமாக வாழச் செய்வான். இதை நீ நிரூபித்துக் கொண்டு வருகிறாய்'' எனவும் கூறினார்.

இராமரும் பிரம்மா கூறியபடியே மச்ச வல்லபனை மன்னனாக்க அழைத்து வரும்படி அனுமாரிடம் கூறினார். அனுமாரும் அவனை அழைத்து வரவே அவனும் இராமரை வணங்கி நின்றான். அவர் பிரம்மா கூறியதை அவனுக்குத் தெரிவித்தார். மச்சவல்லபனும் தேவகட்டளையை ஏற்று நடப்பதாகப் பணிவுடன் கூறினான். இராமரும் அவனுக்கு மகுடாபிஷேகம் செய்து பாதாள லோகத்தின் மன்னனாக ஆக்கினார்.

இதெல்லாம் முடிந்ததும் அனுமார் மிகவும் பணிவுடன் இராமரிடம் தான் சந்திரசேனைக்குக் கொடுத்த வாக்குறுதியைக் கூறினார். அவர் மேலும் "சந்திர சேனையின் உதவி மட்டும் கிடைத்திரா விட்டால் என்னால் மயில் ராவணனின் உயிர்நிலை இருந்த அந்தப் பேழையைக் கொண்டு வந்திருக்கவே முடியாது. நம்மால் மயில் ராவணனைக் கொன்றிருக்கவும் முடியாது. மயில் இராவணன் இறந்த பிறகு உங்கள் இருவரையும் அழைத்து வருவதாகச் சந்திர சேனைக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி வைக்குமாறு வேண்டுகிறேன்'' என்றார்.

இராமரும் "ஓ! அப்படியா! மிகவும் சந்தோஷம். அப்படியே செய்தால் போயிற்று'' என்று கூறினார். அனுமார் மிகவும் மகிழ்ந்து இராமருக்கு முன் வழிகாட்டியவாறே சந்திரசேனை இருந்த மாளிகைக்கு அழைத்துச் சென்றார். இராமரும் புன்னகை புரிந்தவாறே அனுமாரின் பின்னால் சென்றார்.






# மனித இயல்பு

கப்பலூரில் சண்முகம் என்பவன் இருந்தான். அவன் சிறு வயது முதல் நற்குணங்களைக் கொண் டிருந்தான். பெரியவனானதும் அவன் தன்னால் முடிந்த வரை சொல்லாலும் செயலாலும் பணத் தாலும் உதவி செய்து வந்தான். அவன் பல சமயங்களில் வலியப் போய் உதவியும் வந்தான்.

இதன் காரணமாக எல்லோரும் அவன் உதவுவதைப் பெரிதாக மதிக்கவில்லை. அவனிடம் உதவி பெறுவது தம் உரிமை எனவும் நினைத்தும் அவன் தக்க சமயத் தில் உதவாமல் இருந்தால் அவனை கடிந்து கொள்ளவும் செய்தார்கள்.

வேறு சிலர் மறைவில் 'பார், பரோபகாரி போகிறார், ஏதோ சிறு உதவிகளைச் செய்து விட்டு பெயரும் புகழும் சம்பாதிக்க விரும்புகிறார். ஏழை எளியவர் களுக்குப் பெருந்தொகையாகக் கொடுத்து உதவலாமே. அவனிடம் பணம்தான் ஏராளமாக இருக் கிறதே. ஏன் அள்ளிக் கொடுக்கக் கூடாது?'' என்றும் கூறலானார் கள்.

இப்படிக் கேட்டதை எல்லாம் சண்முகன் தன் மனைவியிடம் கூறி "என் நல்ல இயல்பை இங்கு யாரும் புரிந்து கொள்ளவில் லையே. என்னிடமிருந்து பணம் பெற்றவர்கள் திருப்தி அடைவ தில்லை. பணம் கொடுக்கா விட்டால் கோபப்படுகிறார்கள். என் உதவி தேவைப்பட்டவர்களோ என்னைப் பார்த்து பொருமு கிறார்கள். அதனால் கொஞ்ச காலத்திற்கு யாருக்குமே உதவி செய்யாமல் இருந்து விடப் போகிறேன்'' என்றான்.

அதைக் கேட்டு அவன் மனைவி

—பாபநாசம் சாமா—



சிரித்து "உங்களால் பிறருக்கு உதவாமல் இருக்கவே முடியாது. இது உங்களோடு பிறந்த குணம். நீங்கள் உதவி செய்வதை நிறுத்த முயற்சித்தால் உங்கள் மனம்தான் மிகவும் வருந்தும். இப்போது உங்கள் மனம் அலை பாய்வதால் நாம் பல க்ஷேத்திரங்களுக்குப் போய் வரலாம்" என்றாள்.

அதைக்கேட்ட சண்முகம் "கோவில்களுக்குப் போய் வந்தால் மட்டும் மனசாந்தி ஏற்பட்டு விடுமோ? எனக்கு என்னவோ அப்படி ஏற்படும் என்ற நம்பிக்கை இல்லை. மனிதர்களுக்குச் சேவை புரிவதே மாதவனுக்கு சேவை செய்வது போலாகும் என்பதை நீ கேட்டது இல்லையா?" என்று கேட்டான்.

அவனது மனைவியும் "சரி மனிதனின் உருவில்தான் நீங்கள் கடவுளைக் காண்பதாகவே வைத்துக் கொள்வோம். கஞ்சமலை என்ற ஊரில் தத்வானந்தர் என்ற மகான் இருக்கிறார். அவரை கடவுளின் மறுஅவதாரம் என்று கூறுகிறார்கள். பல அற்புதங்களை அவர் செய்து காட்டி இருக்கிறாராம். உங்கள் பெரியப்பாவின் மகன் கதிர்வேல் கூட அவரது பரம பக்தராம். அவர் எதிலும் நம்பிக்கை இல்லாமல் திரிந்து கொண்டிருந்தவர்தானே. அவர் மனதைத் தத்வானந்தர்தான் மாற்றினாராம்" என்றாள்.

அதைக் கேட்டதும் சண்முகத்தின் மனதில் சலசலப்பு ஏற்பட்டது. கதிர்வேலை மாற்றித் தம் சீடராக்கிக் கொண்ட தத்வானந்தரைப் பார்ப்பது என அவன் தீர்மானித்துக் கொண்டான். ஏனெனில் கதிர்வேலுவைப் போன்ற ஒரு சுயநலக்காரனைக் காணவே முடியாது. அவன் தன் தம்பிகளை ஏமாற்றி சொத்தை எல்லாம் அபகரித்துக் கொண்டவன். அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்து அவன் தன் ஊரின் கிராம அதிகாரியாக நியமனம் பெற்றவன். தன்னை மிஞ்சினவன் யாருமே இல்லை என்று சொல்லித் திரிந்து கொண்

டிருந்த அவனைத் தத்வானந்தர் மாற்றினார் என்றால் அது அதிசயம்தான்.

சண்முகம் தன் மனைவியிடம் "நாம் கதிர்வேலுவின் ஊருக்கு போய் அவன் வீட்டில் கொஞ்ச நாள் தங்குவோம். அவன் உண்மையிலேயே மாறிவிட்டான் என்பதை நேரில் கண்டால் நான் தத்வானந்தரை மகான் என்று ஒப்புக் கொள்கிறேன். அவரையும் தரிசித்து மன நிம்மதி பெறுகிறேன்" என்றான். அதுகேட்டு அவன் மனைவி மகிழ்ந்து போனாள்.

கணவனும் மனைவியும் கதிர்வேலுவின் ஊருக்குச் சென்றார்கள். அவர்கள் போனபோது கதிர்வேலுவின் வீட்டில் அமக்களமாகப் பூஜை நடந்து கொண்டிருந்தது. பலர் அதில் கலந்து கொண்டு பக்திப் பரவசத்தோடு பஜனைப் பாடல்களையும் பாடிக் கொண்டிருந்தார்.

பூஜை முடிந்து யாவரும் சென்று விட்டனர். அப்போது கதிர்வேலு சண்முகத்தைப் பார்த்து அன்புடன் வரவேற்றான். அவன் "பார்த்தாயா! இதே ஊரார் என்னை ஊர் சுற்றி, உதவாக்கரை என்றெல்லாம் பேசினார்கள். தத்வானந்தரின் தயவால் இப்போது இவர்களே என்னைப் போல உண்டா என்று கொண்டாடுகிறார்கள்" என்றான்.



அதைக் கேட்ட சண்முகம் "பரவாயில்லை. நீ தத்வானந்தரின் தயவால் திருந்தி விட்டாய். முன்போல இல்லை என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். நீ முன் போல இல்லையே? பிறருக்குத் தீங்கு செய்வதும், வெட்டிச் சண்டைகளுக்குப் போவதும் கிடையாதல்லவா? நல்லவன் என்று பெயர் எடுத்து விட்டாய் என்றும் தெரிகிறது. உண்மையிலேயே அந்தத் தத்வானந்தர் மகான்தான். உன்னிடம் இப்படி ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி விட்டாரே" என்று வியந்தவாறே கூறினான்.

கதிர்வேலோ "இவர்கள் என்னவோ இப்படிப் புகழ்கிறார்கள்.



கிறாயே. உன்னிடம் கோபதாபங்கள் போன்ற கெட்ட குணங்கள் மறைந்து விட்டன என்று நினைத்தேன். பழைய மனத்தாங்கல்களை மனதில் வைத்துக் கொண்டு பழிவாங்குவது முறையா?'' என்று கேட்டான்.

கதிர்வேல் முகத்தைச் சுளித்தவாறே ''அதெல்லாம் கேட்க நன்றாகத்தான் இருக்கிறது. இன்னொன்றைக் கேள். முந்தாநாள் உங்கள் ஊர் கண்ணன் இவ்வூருக்கு வந்திருந்தான். அவன் தன் பெண்ணுக்கு இவ்வூரில் திருமணம் பேச வந்தான். பிள்ளை வீட்டார் எனக்குக் கண்ணனை முன்பே தெரியும் என்பதை அறிந்ததும் அவனது குடும்பம் பற்றி என்னிடம் கேட்டார்கள். யாரோ அவனது மகள் என் மகளைப் போலவே அழகாக இருப்பதாகச் சொல்லி இருக்கிறார்கள். இது எனக்கு கௌரவக் குறைவு. நான் எங்கே! அந்தக் கண்ணன் எங்கே!! அதனால் அந்த சம்மந்தம் கிடைக்காமல் செய்து விட்டேன். தத்வானந்தரின் தயவால் நேற்றுத் தான் என் மகளின் திருமணத்தை நிச்சயம் செய்தேன். அதற்குத் தான் இந்தப் பூஜை'' என்றான்.

அது கேட்டு சண்முகம் ''இப்படி ஒரு நல்ல காரியத்தை நடக்க விடாமல் செய்தாயே. இதனால் உனக்கு என்ன லாபம்?'' என்று கேட்டான். அதற்குக் கதிர்வேல்

ஆனால் இதே ஊரின் வீரப்பன் மகனுக்கு அரசாங்க உத்தியோகம் கிடைப்பது போல இருந்தபோது அதைக் கிடைக்க விடாமல் செய்தவன் நான். ஏனெனில் அவனைப் பற்றி கிராம அதிகாரியான என்னிடம் அவன் நடத்தை பற்றிக் கேட்டார்கள். நான் அவன் நடத்தை சரியில்லை என்று எழுதியதால் அவனுக்கு அந்த வேலை கிடைக்கவில்லை. அந்த வீரப்பன் எனக்கு எதிராக ஒரு வழக்கில் சாட்சி சொன்னவன். அதனால் பழி வாங்கி விட்டேன்'' என்றான்.

சண்முகமும் ''அப்படியா! நீ தத்வானந்தரின் சீடனாகி பூஜை எல்லாம் ஆடம்பரமாகச் செய்

"எனக்கு லாபம் இல்லாது போனாலும் கண்ணனுக்கு நஷ்டம்தானே. அதுகண்டு எனக்கு அல்ப சந்தோஷம். அவ்வளவுதான்" என்றான்.

சண்முகம் "இப்படி உனக்கு நன்மை புரிந்த அந்தத் தத்வானந்தரைக் கண்ணன் திட்டவில்லையா?" எனக் கேட்டான். கதிர் மேலும் "யார் யாரைத் திட்டினால் எனக்கென்ன? நான் நன்றாக இருக்க வேண்டும். எனக்கு நன்மை புரியும்வரை தத்வானந்தர் எனக்குக் கடவுளுக்கு சமம். நான் என் நன்மைக்காகத்தான் அவரது சீடனானேன். பிறருக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு அல்ல" என்றான்.

சண்முகம் அவன் வீட்டில் அதிக நாட்கள் இருப்பது தவறு என எண்ணி ஒரு நாள் இருந்து விட்டுக் கிளம்பி விட்டான். அந்த ஒரு நாளில் கதிர்வேல் தன் பெருமையைத்தான் கூறிக் கொண்டிருந்தான். அங்கிருந்து கிளம்பிய சண்முகம் தன் ஊருக்கே போவான் என அவன் மனைவி எதிர்பார்த்தாள். ஆனால் அவன் கஞ்சமலைக்குப் போய்த் தத்வானந்தரைக் காணலாம் என்றதும் ஆச்சரியப் பட்டாள்.

அவள் "கதிர்வேல் தத்வானந்தரின் சீடனாகியும் மாறவில்லை என்று நேரில் கண்ட பிறகுமா அந்த மகானைக் காணப் போகிறீர்கள்?" என்று கேட்டாள். சண்முகமும் "என்னதான் சுயநலக்காரனாக கதிர்வேல் இருந்தாலும் அவனிடம் ஏதோ ஒரு நம்பிக்கை இருக்கும்படி தத்வானந்தர் செய்தாரே. அந்த மாற்றத்தை அவனிடம் ஏற்படுத்திய தத்வானந்தர் உண்மையிலே மகான்தான். அவர் படிப்படியாக கதிர்வேலின் கெட்ட குணங்களைப் போக்கி விடுவார் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. எனவேதான் அவரைக் காணப் போகிறேன்" என்றான். அவனது மனைவி அதுகேட்டு மகிழ்ந்தாள்.





# அம்புலிமாமா செய்திகள்

## பலூன் விழா

அண்மையில் புதுடில்லியில் பலூன் விழா ஒன்று நடைபெற்றது. இதில் நடந்த போட்டியில் நம் நாட்டுடன், ஜெர்மனி, இங்கிலாந்து ஆகிய நாடுகளும் கலந்து கொண்டன. போட்டி நாளன்று மூடுபனி அதிகமாக இருந்ததால் குறித்த நேரத்தில் ஆரம்பமாகவில்லை. அப்போது திடீரென ஆகாயத்தில் 'தாஜ்மஹால்' உருவ பலூன் ஒன்று பறந்து எல்லோரையும் வியக்கச் செய்தது. இதை பலூன் போட்டியில் கலந்து கொண்ட ஒருவர் உருவாக்கி இருந்தார். அப்போது அங்கிருந்த நம் குடியரசின் துணைத் தலைவர் திரு கே. ஆர். நாராயணன் அதைப் பார்த்துவிட்டு ''முன்பு ஒரு வைஸ்ராய் தாஜ்மஹாலின் அழகைப் பார்த்துவிட்டு அதனை ஆகாய வழியாகத் தூக்கிக் கொண்டு போக விரும்பினார். இப்போது அவர் இருந்திருந்தால் இந்தத் தாஜ்மஹாலைக் கொண்டே போயிருப்பார்'' எனக் கூறினார்.

## வெடியை வெடிக்க வைக்கும் யந்திரம்

தீபாவளியின்போது சிறுவர்கள் வெடிகளை வெடிக்கத் துடிப்பார்கள். ஆனால் அருகில் வெடிவைத்து வெடிக்க பயப்படுவார்கள். பெரியவர்களோ சிறுவர்களை வெடி பற்றி எச்சரித்துக் கொண்டே இருப்பார்கள். ஆனால் சிறுவர்கள் பயப்படாமல் வெடிகளை வெடிக்கும் காலம் நெருங்கி விட்டது. தமிழ்நாட்டில் ஈரோட்டிலுள்ள திரு கே. அனந்தன் என்ற பள்ளி ஆசிரியர் மின்சக்தியால் இயங்கும் ஒரு யந்திரத்தைக் கண்டுபிடித்துள்ளார். இதில் வெடியை வைத்து இயக்கினால் வெடி 20 அடி தூரத்தில் போய் விழுந்து வெடிக்கிறதாம்.





# சுகம் எங்கே?

ஒரு காட்டில் ஒரு பறவை இருந்தது. அது நற்காரியங்களையே செய்ததால் அது இறந்ததும் அதனை தேவர்கள் தேவலோகத்திற்குக் கொண்டு சென்றார்கள். அங்கு தேவர்கள் அப்பறவைக்கு மரியாதை செய்து "உனக்கு என்ன வேண்டுமோ கேள். கொடுக்கிறோம்" என்றார்கள். அப்பறவைக்கு அப்போது எதுவும் கேட்கத் தோன்றவில்லை.

சில நாட்கள் தேவலோகத்தில் சுகமாக இருந்த அந்தப் பறவை ஒருநாள் தேவர்களிடம் "இங்கே என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை. அதனால் என்னை மறுபடியும் பூலோகத்திற்கு அனுப்பி விடுங்கள்" என்று வேண்டியது.

தேவர்களும் "நீ எந்த உருவையும் எடுத்துக் கொள்ளலாம். எந்த லோகத்திலும் திரிந்து வரலாம். இந்த வரத்தை அளிக்கிறோம்" என்று கூறினார்கள். அப்போது அப்பறவை சிறிய இறக்கைகள் கொண்ட மனிதனின் உருவில் பூலோகத்திற்குப் போயிற்று. அங்கு அது தான் வசித்த காட்டிலேயே ஓரிடத்தில் ஒரு வீட்டைக் கட்டி அதில் வாழ்ந்து வந்தது.

ஒருநாள் அதற்கு பழைய சம்பவம் ஒன்று நினைவிற்கு வந்தது. பறவையாக இருந்தபோது அது தாத்தாவின் வீட்டிற்குப் போயிற்று. அங்கு எல்லா வசதிகளும் இருந்தன. வேடிக்கைகள் பல காணலாம். எப்போதும் மகிழ்ச்சியாக இருக்கலாம். எதைப்பற்றியும் கவலைப்படவும் வேண்டியதில்லை. இப்போது அங்கு போய்ப் பார்க்க அது ஆசைப்பட்டது.

இங்கே காட்டில் இருந்தால் எதைப்பற்றியாவது யோசிக்க

—ரேணுகா ரவி—




வேண்டி இருக்கிறது. அதனால் தாத்தாவின் ஊருக்குப் போய் இருக்கிறேன். அங்கு எவ்விதக் கவலையும் இராது. அங்கேயே இருந்தும் விடலாம். இந்தக் காட்டிற்கு மறுபடியும் வரவேண்டியதும் இல்லை என்று அது நினைத்தது.

தனக்கு வேண்டிய உடைகளையும் மணத்தையும் எடுத்துக் கொண்டு சாப்பிட்டபின் வீட்டை பூட்டிக் கொண்டு அது தாத்தாவின் ஊருக்குக் கிளம்பியது. வீட்டுச் சாவியை வீட்டுக் கூரையில் சொருகிவிட்டு அது நடந்தே போயிற்று.

நாலடி வைத்ததுமே ஒரு மான் குட்டி அதனிடம் ஓடி வந்தது. அது பயந்து பயந்து பின்னால் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தது. "என்ன மான்குட்டி! என்ன நடந்தது?" என்று கேட்டது அப் பறவை.

மான்குட்டியும் "நம் காட்டில் வேட்டைக்காரர்கள் நுழைந்து விட்டார்கள். தம் அம்புகளால் அவர்கள் தாம் கண்ட மிருகங்களை எல்லாம் அடித்து 'வீழ்த்துகிறார்கள். நான் தப்பி ஓடி வந்து விட்டேன். உன் வீட்டில் மறைந்து இருக்கிறேன்" என்றது.

இரக்க குணம் கொண்ட அப் பறவை கூரையில் சொருசிய சாவியை எடுத்து கதவைத் திறந்து மான்குட்டியை உள்ளே போக விட்டது. பிறகு அது "மான்குட்டி! கொல்லைப்புறத்தில் காய்கறித் தோட்டம் உள்ளது. உன் இஷ்டத்திற்குச் சாப்பிட்டு இங்கேயே இரு" என்று கூறி வாசல் கதவைப் பூட்டி சாவியைக் கூரையில் சொருகி விட்டு தாத்தாவில் ஊருக்குக் கிளம்பியது.

அப்போது ஒரு வாத்து அலறிக் கொண்டே ஓடிவந்து அப்பறவையின் காலடியில் நின்றது. அப்பறவையும் "என்ன வாத்தே! என்ன நடந்தது? ஏன் ஓடி வருகிறாய்?" என்று கேட்டது. வாத்தும் "நான் என் கூட்டத்தவரோடு குளிக்கப் போனேன். எல்லோரும் குளித்து விட்டுப் போகும்போது நான்

குளித்து முடிக்கவில்லை. அவர்கள் என்னை விட்டு விட்டுப் போய் விட்டார்கள். என்ன செய்வேன்?'' என்றது.

அது கேட்டு பறவை "நீ பயப் படாதே! என் வீட்டின் பின்புறத் தில் ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதில் நீ சுகமாக இருக்கலாம். என் வீட்டிலுள்ள மான்குட்டி உனக்குத் துணையாக இருக்கும். நான் என் தாத்தாவின் ஊருக்குப் போய்விட்டுத் திரும்பி வருவேன். அதுவரை நீ இங்கேயே இரு'' என்று கூறி கூரையிலிருந்து சாவியை எடுத்து வீட்டுக் கதவைத் திறந்து வாத்தை உள்ளே அனுப்பிவிட்டு மறுபடியும் கதவைப் பூட்டி சாவி யைக் கூரையில் சொருகி விட்டுக் கிளம்பியது.

மிகவும் தாமதமாகி விட்டது என்று நினைத்து அது வேகவேக மாக நடந்தது. பத்தடிப் போனதும் யாரோ கூப்பிடுவது கேட்டுத் திரும்பிப் பார்த்தது. ஒரு அணில் தான் அது. கீச் கீச் சென்று பயந்த வாறே கத்திக் கொண்டு வந்தது.

பறவையும் "என்ன அணிலே! என்ன விஷயம்?'' என்று கேட்டது.

அணிலும் "மழை காலத்திற்கு வேண்டுமே என்று மரப்பொந்தில் நான் உணவைச் சேகரித்து வைத் திருந்தேன். அதை யாரோ திருடிக் கொண்டு போய்விட்டார்கள். இவ்வளவு நாட்களாகப் பாடுபட் டுச் சேர்த்தது ஒரேயடியாகப் போய்விட்டது. இன்றைய சாப்



பாட்டிற்குக் கூட எதுவும் இல்லை'' என்று கதறியது.

அதுகேட்டு பறவை ''நீ கொஞ்சமும் கவலைப்படாதே. என் வீட்டில் வேண்டிய உணவு தானியம் இருக்கிறது. நீ எவ்வளவு வேண்டுமானாலும் எவ்வளவு நாட்களுக்கு வேண்டுமானாலும் இங்கேயே இருந்து சாப்பிடலாம். நான் இப்போது என் தாத்தாவின் ஊருக்குப் போய்க்கொண்டிருக்கிறேன். விரைவிலேயே வந்து விடுவேன்'' எனக்கூறி சாவியை எடுத்து வீட்டுக் கதவைத் திறந்தது. அணிலை வீட்டிற்குள் விட்டுவிட்டு மறுபடியும் பூட்டி சாவியைக் கூரையில் வைத்துவிட்டு அது கிளம்பலாயிற்று.

அப்போது மாலைப் பொழுதாகி விட்டது. நான்கடி எடுத்து வைத்த போது அதன் மனம் மாறி விட்டது. அது ''நான் இந்தக் காட்டில் இருந்து பல மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் உதவி செய்திருக்கிறேன். இன்றும் கூட சிலர் என் உதவியை நாடி வந்தன. அவற்றிற்கு என் வீட்டில் இடமளித்தேன். அவை தாம் எவ்வளவு சந்தோஷப்பட்டன! இவைகளை எல்லாம் விட்டு விட்டு நான் என் தாத்தாவின் வீட்டிற்குப் போனால் சுகமாகவா வழ முடியும்? இவற்றின் நினைவு வருமே! அதனால் தான் அங்கே போகவில்லை, இங்கேயே இருந்து விடுகிறேன்'' என்று நினைத்துத் தன் வீட்டிற்கே திரும்பி வந்தது.

''எனது காட்டில் என் நண்பர்கள் கஷ்டப்படும்போது நான் மட்டும் தாத்தாவின் வீட்டிற்குப போய் சுகமாக இருப்பதா? கூடாது. இங்கேயே நான் இருப்பேன். மற்றவர்களுக்கு உதவுவதே என் சுகம்'' என அது நினைத்தது. அதற்குப் பின் அது தன் தாத்தாவின் வீட்டிற்குப் போகும் எண்ணத்தையே கைவிட்டது.



# இயற்கை விநோதங்கள்:

## முதலில் தலை!




பாம்புகள் உயிருள்ள பிராணிகளைப் பிடித்து விழுங்குகின்றன. பிடிக்கும் உயிரினங்களைப் பொறுத்து அவற்றை இறுக்கியோ அல்லது விஷப் பல்லால் கடித்தோ சாகடித்து விழுங்கு கிறது. முதலில் பாம்பு இறந்த உயிரினத்தின் தலையைத் தன் வாயில் நுழைத்து விழுங்க ஆரம்பிக்கிறது. மலைப் பாம்புகள் இவ்வாறு விழுங்கிய உயிரினங்களின் எலும்புகளை நொறுக்கக் கிளைகளில் தம் உடலைச் சுற்றுகின்றன.

## ஒரே வடிவான இலைகள்

வண்ணத்துப் பூச்சியின் இருபுற இறக்கைகள் ஒன்று போல இருப்பது போல எந்த இலையை எடுத்துப் பார்த்தாலும் நடுநரம்பின் இரு பக்கங்களிலும் உள்ள பகுதிகள் ஒன்று போல இருக்கும். ஆனால் வட அமெரிக்காவிலுள்ள 'செஸ்ஸாப்ரோஸ்' என்ற மர இலைகள் நடு நரம்பின் இருபக்கங்களிலும் வேறுபட்டே இருக்கும்.







## தண்ணீருக்குள் வேகம்

அண்டார்டிகாவிலுள்ள பெங்குவின் பறவைகள் பறக்க முடியாதவை. ஆனால் அவை ஆழமான கடலில் மூழ்கி மற்ற நீர்வாழ் இனங்களை விட வேகமாக நீந்தக் கூடியவை. எம்பரர் பெங்குவின் பறவை கள் கடலில் 870 அடி ஆழம் வரை போய் 20 நிமிடங்கள் வரை மூழ்கி இருக்கக் கூடியவையாம்.

*"Now I'll tell you the story of Mama Bear and Papa Bear".*



Your child and Mama Bear
You just can't keep them apart.



COON



BOW-BOW



JUMBO

*A wide range of soft toys from the Chandamama Collection – each with its own unique appeal!*

*Every Soft Toy in the Chandamama Collection has been specially made to bring your child years of warmth and friendship.*

- *Totally Safe – for children of any age.*
- *Durable – high quality synthetic fibre used.*
- *Washable – will not lose shape.*

*And now – a surprise gift offer!*

*With every Chandamama Soft Toy you buy. Ask your shopkeeper for a*

**Free Gift Coupon.**



*Simply fill it in and mail it to the given address. We will post you gifts that will keep your child amused and happy for hours.*

*Buy Now – offer open for a limited period only!*

*Available at all leading outlets.*



WOBBIT




SPORTY




CHANDAMAMA

COLLECTION

ARTIG/CT/1153

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ பிப்ரவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **ஆடி ஓடி களைத்தவள்**

இரண்டாவது போட்டோ: **ஆடி ஓடி களிப்பவள்**

பரிசு பெற்றவர்: **வெ. ரேவதி, சிதம்பரம்**


# அம்புலிமாமா

**இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48 - 00**

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி:

**டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600 026**



Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---


The stories, articles and designs contained herein are exclusive property of the Publishers and copying or adapting them in any manner will be dealt with according to law.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

